சந்திரட்டிய புத்தகம். இதனைத் தொகுத்து வெளியிட்டவர் தில்லையம்பூர்ச் சந்திர சேகர கவிராஜ பண்டிதர்.

தநு—(1) கசியபன் மனைவி. தக்ஷன் புத்திரி. தானவர்களைப் பெற்றவள் (2) ஒரிராக்ஷசன். இவன் கந்தர்வனாயிருந்து தேசருஷி சாபத்தால் உருமாறியவன். கவந்தனைக் காண்க.

தநுத்தான்—ஒரு ஆரிய மன்னன். கனகவிசயர்க்கு நண்பன். [மணி]

தநுர்வேதம்—நான்கு உபவேதங்களி லொன்று.

தன்வந்திரி—(1) திருப்பாற் கடலைக் கடைந்த காலத்தில் அதினின்று பிறந்தவன். வாகட நூல்வல்லவன். ஆயுர்வேதத்தை வெளிப்படுத்தக் கருதித் தீர்க்கதன்மன் மகனாக மீண்டும் பிறந்தவன் (2) விக்கிரமார்க்கன் சபையில் விளங்கிய நவரத்தின மெனும் பட்டம் பெற்ற பண்டிதருளொருவன். இவன்செய்த வடமொழிக்கண்டே தன்வந்திரி நிகண்டெனப்படும்.

## தா

தாக்ஷாயணி—(1) தக்ஷகுமாரி. இது தக்ஷன் வேண்டுகோளின்படி உமாதேவியைப் புத்திரியாகப் பெற்ற அவசரம். உமாதேவி ஒருகாலத்திலே சிவபெருமான் திருக்கண்களை விநோதார்த்தமாகப் பொத்திய பொழுது உலக மெங்கும் இருண்மயமாக இறைவன் திருநெற்றி விழியால் உலகினைப்பிரகாசப்படுத்தின போது, ஆன்மாக்கள் அறிவழிந்து செய்கடன்கள் தவறின பாவத்தைப் பரிகரிக்கும்படி தக்ஷபுத்திரியாக அவதரிக்கக் கட்டளையிட்டபடி அவதரித்தது. சிவபிரான் திருமணஞ்செய்துகொண்டு கைலைக்குக் கொண்டுசென்றனன். தக்ஷன் சிவபிரானை மதியாமல் தான் புற்றனன், (2) அதிதி. (3) நக்ஷத்திரங்கள்.

தாடகை—சுகேதனென்னும் யக்ஷன் மகள். ஆயிரம் யானை பலமுடையவள். இவள் அகஸ்திய முனிவர் சாபம் பெற்று, மாரீசன் சுபாகு என்னுமிருபுதல்வருடனே இராக்ஷசத் தன்மையுற்றனள். இவள் விசுவாமித்திர யாகத்தில் இராமனாற் கொல்லப்பட்டனள்.

தாண்டவராயசுவாமிகள்—சோழநாட்டில் நன்னிலமென்னு நகரில் வேதியர் குலத்தி லுதித்து வேதாந்த நூல்களை யாராய்ந் துணர்ந்தவர். இவரால் கைவல்லிய நவநீதமெனு நூலியற்றப்பட்டது.

சாதகி—பலணபாதேவன் தேவி.

தாதாசாரியர்—காஞ்சிபுரத்தில் வைணவ வேதியர் குலத்திலே விளங்கிய ஒருபண்டிதர். இவர் அப்பைய தீக்ஷிதரிடம் பொறாமை கொண்டு, தம கண்பனுடனே அரசன் சமுகத்தில் அவரை வாதுக்கழைத்து அவரோடு பேசமுடியாது தோல்வியடைந்தவர். தீக்ஷிதருக்கு ஒரு பகலில் வயிற்றுவலி வந்தடைக்குவது வழக்க மென்ப துணர்ந்து, அக்காலத்தில் அரசனமுன் வருவிக்க, அவர் உத்தரீயத்தைக் கழற்றி வைத்தோனை க்க, அவ்வலி அதனை முடக்கியவைக் கண்ட அரசன் இதென்னவென, இது பண்டைய வினைப்பயன், ஆகலின் பரிகாரந் தேடிக் கொள்ளாது இதனையான் அனுபவிக்கின்றேன்

மிசைவரி விறக்கவெனச் சபிக்க, அம்முனிசாபத்திற் கஞ்சிக் கடலிலேயேவசிக்கையில், சுப்பிரியனெனும் வர்த்தகனொருவன் கடலிற் செல்ல, அவனைப் பற்றிச் சிறையிலிட, அவன் பஞ்சாக்ஷர தியானஞ் செய்து சிவபிரானிடம் பாசுபதாஸ்திரம்பெற்று அதனால் அவ்வசுரர்களை யெல்லா மொழித்தனன். தாருகை உமாதேவியாரன் பெற்று ஒருவர்க்குந் துன்புசெய்யாது அங்கேயே வசித்திருந்தனள் [சைவபு]

தாருகை—தாருகன் மனைவி. தாருகனிற்காண்க.

தாரை—(1) பிருகஸ்பதி மனைவி. சோரநாயகனாகிய சந்திரனைக்கூடிப்புதனைப்பெற்றவள். (2) ஓரப்சரசு (3) சாரன்மகள். வாலிமனைவி. அங்கதன்தாய் (4) வீரையென்பவளின் தமக்கை. இரவிவன்மன்மகள். துச்சயராசன் மனைவி. யானையால் வீரை யிறந்தாளெனபதுகேட்டு மாடத்துள்ள நிலாமுற்றத்திருந்து நிலமிசை விழுந்திறந்தவள். இவளே மறுபிறப்பில் மாதவியாகப் பிறந்தவள்.

தார்க்கிகன்—ஒருசமயி.

தாலகேதனன்—(1) வீடுமன் (2) பலராமன்.

தாவட்டம்—சிற்பநூல் முப்பத்திரண்டனுளொன்று.

தானஜங்கன்—கார்த்தவீரியார்ச்சுனன் பௌத்திரன். மாகிஷ்மதிபுரம் இவன் ராஜதானி.

தானவகையோத்து—தானவிலக்கணங் கூறும் பழயதோர்நூல். [சிலப்]

தானவர்—கசிபருக்குத் தநுவிடம் பிறந்தவர்கள்.

தானியமாலினி—ஓரப்சரசு. இராவணனைக் கூடி அதிகாயனைப் பெற்றவள். [கம்ப.

தான்தோன்றிமாடம்—திருஆக்கூரிற்

## தி

திக்கனசோமயாஜி—ஒரு தெலுங்க பண்டிதர்.

திக்கஜங்கள்—ஐராவதமுதலிய எட்டு யானைகள். இவை இந்திரன் முதலியதிக்பாலர்கட்கு வாகனங்களாம்.

திக்பாலர்கள்—இந்திரன் அக்கினி யமன் நிருதி வருணன் வாயு குபேரன் ஈசானனெனப்படு மெண்மர். இவர் கிழக்குமுதல்வடகிழக்கீறாகவுள்ள எட்டுதிக்குகட்கு இறைவர்கள்.

திசைமுகக்கரு—பிரமகாயிக லோகமுதலிய பிரமலோகம் இருபதினுமுள்ள இருபது வகைப்பட்ட பிரமகணபிண்டங்கள். [மணி]

திட்டிவிடம—கண்ணில் விடமுடையதொரு பாம்பு. இதற்கு அழற்கணாகம், கஞ்ச விழியரவு எனவும் பெயர்கள் வழங்கும். இதன் பார்வையில் எதிர்பட்டோரிறப்பரென மணிமேகலை கூறும்.

திணைமாலை நூற்றைம்பது—சங்கமருவிய பதினெண்கீழ்க் கணக்கினுளொன்று. இது கணிமேதாவியாரியற்றியது.

திணைமாலையைம்பது—சங்க மருவிய பதினெண்கீழ்க் கணக்கிலொன்று. கண்ணஞ் சேந்தனா வியற்றப்பட்டது.

திணைமொழியைம்பது—பதினெண்கீழ்க்கணக்கினு ளொன்று. இது சாத்தந்தையார் மகனார் கண்ணஞ் சேந்தனா ரியற்றப்பட்டது.

திதி—காசிபன் ஜேஷ்டமனைவி. தக்ஷகுமாரி. இவள் மக்கள் தைத்தியர்.

திதிக்ஷன்—மகாமநுவின் இரண்டாம் புத்திரன்.

தித்தன்—உறையூரிலிருந்த ஒருசோழன். இவன் மகன் சோழன் போர்வைக்கோப்பெருநற்கிள்ளி. [புறநா]

திபோதாசன்-திவோதாசனிற்காண்க

திமித்துவஜன்—இந்திரனாற் கொல்லப்பட்ட ஓரசுரன். இவ்யுத்தத்தில் இந்திரனுக் குதவிசெய்த தசரதன் களைத்திருக்கையில் கைகேயி செய்த உபசாரத்திற்கு மகிழ்ந்து யாது வேண்டுமென, யான் விரும்பிய காலத்தில் இரண்டு வரங்கள் கொடுக்கவென்று கேட்டுக்கொண்டனள். இச்சலுகையாலேயே பரதனுக்குப் பட்டமும் இராமனுக்கு வனவாசமும் வேண்டுமென்று பின்னர் கேட்க நேர்ந்தது.

தியுதிமந்தன்—சுவாயம்பு மநுபுத்திரரிலொருவன். இவனுக்குக் கிரௌஞ்சத்துவீபம் கொடுக்கப்பட்டது.

தியுமத்சேனன்—சாளுவராஜன். சத்தியவந்தன்பிதா. சாவித்திரிமாமன்.

தியுமந்தன்—திவோதாசனிற்காண்க.

திரசதஸ்யன்—வசுதனென்றும் பெயருடையான். இக்ஷ்வாகுமரபினன். புருகுத்சன் மகன். இவன் மகன் அநரண்ணியன்.

திரயாரணன்—திரியாரணன்.

திரயாருணி—ரிதயன் மகன்.

திரவிடம்—தமிழ்.

திராக்ஷாராமம் — ஒரு சிவ ஸ்தலம். இது மகாராஷ்டிர கர்நாடக தேசங்கட்கிடையே மலைப் பிரதேசத்துள்ளது.

திராவிடம்—(1) தென்பாஷை. தமிழ் (2) தமிழ் வழங்கும் பூமி (3) வேதியர். இவர் திராவிடர் கர்நாடர் மகாராஷ்டிரர் கூர்ச்சரர் தைலங்கரென ஐந்து வகுப்பாயுளர்.

திராவிடாசாரியர்—வேதாந்த சூத்திரத்திற்கு வடமொழிப் பாஷியஞ் செய்தாரிலொருவர். இவர் மதம் இராமாநுஜாசாரியர் பாஷியத்திற் கூறப்பட்டுளது பற்றி அவர்க்கு முற்பட்டவரென ஊகிக்கப்படுவர்.

திரிகடுகம்— சங்கமருவிய பதினெண்கீழ்க் கணக்கினு ளொன்று. இது நூற்றொரு வெண்பாக்களையுடையது. சுக்குத் திப்பிலி மிளகு என்னு மூன்றும் உடலுக்குற்ற பிணிநீக்குந் திரிகடுகமென மருத்துநூலார் கூறுமாப்போல, ஒவ்வொரு செய்யுளினுமமைந்த மும்மூன்று நீதிகள் உயிர்க்குறுதி பயத்தலின் திரிகடுகமெனப் பெயரிடப்பட்டது. இந்நூலாசிரியர் நல்லாதனார். இவர் இந்நூலின் காப்புச் செய்யுளில் "கண்ணகன் ஞாலம் அளந்ததூஉங் காமருசீர்த், தண்ணறும் பூங்குருந்தஞ் சாய்த்ததூஉம் — நண்ணிய, மாயச் சகட முதைத்ததூஉ மிம்மூன்றும், பூவைப்பூ வண்ணனடி" எனத் திருமாலினைத் துதித்தமையின் வைணவரென்றெண்ணத்தக்கது. இதற்குப் பழைய தோருரையுண்டு.

திரிகர்த்தன் — ஆரியாவர்த்தத்தின் வடமேற்கிலுள்ள தேசத்தரசன். இவன் பாரதப்போரில் மிகப்பெருப்போர் புரிந்தவன்.

திரிசங்கு—இக்ஷ்வாகுமரபிலொருவனாவன். இவன் மகன் அரிச்சந்திரன். இவன் தேகத்துடன் சுவர்க்கமடை

யவேண்டுமெனத் தன் குலகுருவா
ன வசிஷ்ட முனிவரை யாசித்த
அவர் தடுத்தமையின், அவர் புத்தி
ரரையாசித்து, குருவார்த்தைக் கட
ந்தமையின, நீசனாகுகவெனச் சபி
க்கப்பட்டு விசுவாமித்திரமுனிவரை
யடைந்து பிரார்த்தித்து அவரால்
அந்தரசுவர்க்கமொன்று நிருமித்து
வைக்கப்பட்டவன். இது திரிசங்கு
சுவர்க்கமென்று வழங்கும்.

திரிசங்குசுவர்க்கம்—அந்தரசுவர்க்கம்.
விசுவாமித்திர முனிவரால் திரிசங்
குவுக்குச் சிருஷ்டிசெய்து கொடு
க்கப்பட்டது. திரிசங்குவிற்காண்க.
திரிசங்கு சுவர்க்கத்திற்கு செலுத்
தப்பட்டவுடன் தேவர்களால் நீச
னெனத் தள்ளப்பட்டும், விசுவாமி
த்திரர் தபோபலத்தால் உயர்த்தப்
பட்டும் பின்னர் நிலை பெறுத்தப்
பட்ட விடம்.

திரிசடை — ஒராக்ஷி - விபீஷணன்
மகள். இலங்கையில் அசோகவன
த்தில் இராவணன் சீதையைச் சி
றையிலிட்ட பொழுது சீதைக்குப்
பேருதவியுந் துணையுமா யிருந்த
உத்தமி.

திரிசக்திரிகைபீடம்—சத்தி பீடங்கள்
அறுபத்துநான்கனுளொன்று. இது
குரண்டலத்தி லுள்ளது.

திரிசிரன்—(1) விச்சிரவாவு மகன்.
ஜனஸ்தானத்திலிருந்தவன் இவன்
சூர்ப்பணகையால் இராமனை யெ
திர்த்துக் கரனுடன் மாண்டவன்.
(2). இராவணன் புத்திரன். (3)
துவஷ்டாபுத்திரன். இந்திரனுக்கு
ஒரு காலத்தில் குருவா யிருந்து
அவன் கருத்துக்கு மாறாக யாகஞ்
செய்து இந்திரனாற் கொல்லப்பட்
டவன். இப்பெயர் பெற்றவர் இன்
னுஞ்சிலருளர்.

திரிசிராமலை—திரிசிரன் வசித்தமை
யின இப்பெயரேற்றது. இது சிவ
க்ஷேத்திரம். தாயுமான சுவாமிகள்
சுவாமி பெயர். இந்த ஸ்தலபுரா
ணம் செவ்வந்திப் புராண மென
வழங்கும்.

திரிசூலபீடம்—சத்திபீடங்கள் அறு
பத்துநான்கனு ளொன்று. இது
பஞ்சநதத்தி லுள்ளது. [குவன்.

திரிதன்—பிரமமானச புத்திரரி லொ

திரிதன்வன்— இக்ஷ்வாகு மரபினன்.
சுமனன் புத்திரன். இவன் புத்தி
ரன் சூரியாரண்ணியன்.

திரிதிவை — ஒருநதி. இது பாரிபத்
திரகிரியி லுதித்தது.

திரிபுரசுந்தரி—(1) திருவொற்றியூர்
(2) திருவான்மியூர் (3) திருகாரா
யூர் (4) திருகல்லூர்—இத்தஸ்தலங்
களில் உமாதேவியாருக்கு வழங்
குந் திருநாமம்.

திரிபுரபைரவிபீடம்— அறுபத்து நா
ன்கு சத்தி பீடங்களி லொன்று.
இது மணித்திவசதிலுள்ளது.

திரிபுரர்—தாரகன் [சூரபன்மன் தம்
பி] புத்திரர்களாகிய தாரகாக்ஷன்,
கமலாக்ஷன், வித்யுன்மாலி அல்லது
வித்துருமாலி யெனப்படும் மூவர்.
இவர்கள் அருந்தவஞ் செய்து பொ
ன்வெள்ளி இரும்பினாலாகிய மும்
மதில்களையுடைய புரங்களைப்பெ
ற்று, தாம் விரும்புமிடங்கட்கு அப்
புரங்களுடன் சென்று மக்களின்
மீதிறக்கி அலற்றுற நாசஞ்செய்ய
க்கண்ட திருமால் நாரதரால் திரி
புரர்க்குப்பௌத்த மதோபதேசஞ்
செய்வித்து, சிவபெருமானிடம்

விண்ணப்பிக்க, சிவபெருமான் திரிபுரத்தை யடைகையில், தேவர்கள் ஒவ்வொருவரும் தம்மாலேயே திரிபுராந்தமாகின்றதென இறுமாந்திருப்பதுணர்ந்து புன்னகைகோட்டிப் புரமூன்றையும் பொடிபடுத்தினர். அதிலிருந்தோர் இறந்தொழிய உய்யவல்லார் மூவரைச் சிவகணத்தலைவராக்கினர்.

திரிபுராந்தகன் } திரிபுரதகனன் } சிவபெருமான். திரிபுரர் செய்த துன்புணர்ந்த தேவர்கள் வேண்டுகோளுக்கிரங்கி, பூமி தேராகவும், சூரிய சந்திரர் இரதசக்கரங்களாகவும், நான்குவேதங்கள் நான்கு புரவிகளாகவும், பிரமன் சாரதியாகவும், மந்திரம் கடிவாளமாகவும், பிரணவம் சாட்டையாகவும், மேருமலை வில்லாகவும், சேஷன் நாணாகவும், திருமால் பாணமாகவும, வாயு அம்பிற்கட்டிய சிறகாகவும் கொண்டு திரிபுரத்தையடைகையில், தேவர் ஒவ்வொருவரும் தம்மாலேயே திரிபுரதகனம் நிறைவேறுவதாகச் செருக்குற்றமையின் அவ்வாறின்றிச் சிரித்தெரித்தனர்.

திரிபுராந்தகேசர்—திருவிற்கோலத்தில் சிவபிரானுக்குரிய திருநாமம்.

திரிபுருஷ்டன்—யதுமரபினன். வசுதேவன் மகன். இவன் தாய் திருததேவி.

திரிபுவனம்—ஒரு சிவஸ்தலம். காவிரியின் தென்கரையிலுள்ளது.

திரிமூர்த்தி — சகுணசிவமானது முத்தொழிற் காரணமாகச் சகளீகரித்த பிரம விஷ்ணு ருத்திரரெனுந் திருமேனி. இடையில் உருத்திரனும், வலப்புறத்தில் பிரமனும், இடப்புறத்தில் திருமாலுமாகவிளக்கும் இதனை, "வைத்த நின்னை யென் வலப்புறத்தளித்தனை நிய, யைந்து பூவைமது வண்ணனையென னிடப் பாலின், தந்தனி தனனிவிர் வெண் சரிமுகன் றழல்வேற், சந்த னேரெனக் கருணையி னுச்சியோக் குரைத்தான்" என்பதனுலுணர்க. இத் திரிமூர்த்தியை ஏகபாத திரிமூர்த்தியென்றும், திரிபாத திரிமூர்த்தியென்றுஞ் சொல்வதுண்டு. இது ஆகம விஷயமாயினும் சிவபராக்கிரமநூலிற் காண்க.

திரியக்சன்—விப்பிரசித்தி மகன்.

திரியம்பகம்—தக்ஷசங்கார நிமித்தம் வீரபத்திரருக்குக்கொடுத்தனுப்பிய சிவன்வில். பின்னர் நிலத்திற் கிடந்து ஜனகனோடு காக்கப்பட்டு இராமனால் முரிபட்டது என்கிறார்கள்.

திரியம்பகன்—(1) உருத்திரன். (2) விநாயகன் (3) வீரபத்திரன் [முக்கணன்]

திரிலோசனசிவாசாரியர்—சித்தாந்த சாராவளியெனு நூலாசிரியர்.

திரிவேணி—கங்கை யமுனை சரஸ்வதி கூடுமிடம். இது திரிவேணி சங்கமமெனவும்படும். [சைவபு]

திரு அகத்தியான்பள்ளி—அகஸ்தியர் முதலிய முனிவர்களும் தேவர்களும் பூசித்தஸ்தலம். திருஞானசம்பந்தசுவாமிகள் தேவாரம் பெற்றது. சுவாமி பெயர் அகத்தி யேசுவரர். அம்மை மங்கை நாயகி. தீர்த்தம் அகஸ்திய தீர்த்தம். சோழநாட்டில் காவிரித் தென்கரையிலுள்ளது.

திருஅச்சிறுபாக்கம்—தேவர்கள் பூசித்த தலம். திரிபுரர்களைச் செயிக்கும்பொருட்டு சகலதேவர்களுக்கு

சிவபெருமான் போர்க்கோலத்திற்கேற்ப யுத்தகருவிகளாக வந்தபொழுது தங்களாலே அது நிகழ்வதாக இறுமாந்தமையின், சிவபெருமான் தேரின்மீது அடிவைத் தூன்றிய பொழுது அத்தேரின் அச்சுமுறிந்தவிடம். இது விநாயகக் கடவுளை வழிபடாமையின் நிகழ்ந்ததென்றுங் கூறுப. திருஞானசம்பந்தர் பதிகம் பெற்றது. சுவாமி டாக்கபுரேசர் அம்பாள் ஆதிசுந்தரமின்னம்மை. தீர்த்தம்தேவதீர்த்தம். தொண்டைநாட்டி லுள்ளது.

திருஅச்சோபுரம்—அகத்திய முனிவர் பூசித்த ஸ்தலம். திருஞான சம்பந்தர் பதிகம் பெற்றது. சுவாமி சோபுரநாதர். அம்பாள் சோபுரநாயகி. தீர்த்தம் பரமதீர்த்தம். இது நடுநாட்டி லுள்ளது.

திருஅஞ்சைக்களம்—பரசுராமன் தாய்க்கொலைபுரிந்த பாவமகலப் பூசித்த க்ஷேத்திரம். அஞ்சைக்களத்தீசர் - உமையம்மை - அலைவாய்த தீர்த்த முதலியன. சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் "தலைக்குத் தலைமாலை யணிந்ததென்னை" எனப்பதிகமோதி, வெள்ளையானை யிவர்ந்து திருக்கைலைக்குச் சென்றதும் சேரமான் பெருமாணாயனார் திருத்தொண்டு புரிந்ததும் இத்தலமே. இதுமலைநாட்டுச் சிவஸ்தலங்களி லொன்று.

திருஅட்டபுயங்கம்— கஜேந்திரனுக்குப் பிரத்தியக்ஷமான க்ஷேத்திரம். சுவாமி சக்கரராஜர் ஆதிகேசவபெருமான் - பதுமவல்லி - அலர்மேன்மங்கை - சுகனுக்கருளிய விமானம் - சக்கிர புஷ்கரணி - பேயாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். இது காஞ்சியி லுள்ள ஒரு விஷ்ணு ஸ்தலம்.

திருஅண்ணாமலை—கிரேதாயுகத்தில் அக்கினிவடிவும், திரேதாயுகத்தில் சுவர்ணவடிவும், துவாபரயுகத்தில் தாமிரவடிவும், கலியுகத்தில் கல்வடிவுமாக விளங்கும் மலை. பிரமனும் விஷ்ணுவும் நான்பிரமம் நான்பிரமமென ஒருவரோ டொருவர் செருக்கிச் சமர் செய்த பொழுது, அவர்கட் கிடையே அழற்றூணெழுந்து அநுக்கிரகித்து அவர்கள் பிரார்த்தனைக் கிணங்கிக் கார்த்திகைக்குக் கார்த்திகைநாள் ஒருசோதியைநுனியிற் காட்டுந்தலம். திருஞானசம்பந்த சுவாமிகள் திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரமும், மாணிக்கவாசக சுவாமிகள் திருவெம்பாவையும் திருவம்மானையும் பாடப்பெற்றது. அருணகிரி நாதர் அவதார ஸ்தலம். பிரதக்ஷிணஞ் செய்த புழு பூனை அகலமுதலியன முத்தி பெற்ற விடம். சிவபெருமான் வல்லாளராசனுக்குப் புதல்வராகவந்து உத்தரகிரியை நடத்தியது மிவ்விடமே. சுவாமி அண்ணாமலையார் அருணாசலேசுவரர். தேவி உண்ணாமுலை. அபீத குசாம்பாள் தீர்த்தம் பிரமதீர்த்தம் விஷ்ணுதீர்த்தம் இமையவல்லி தீர்த்தம் முதலிய இருநூற் றறுபத்துநான்கு தீர்த்தங்கள். இவற்றுட் சிலவே இப்போது காணப்படுவன. தேயுலிங்க க்ஷேத்திரம், நடுநாட்டி லுள்ளது.

திருஅதிகை வீரட்டானம்—சிவ பெருமான் வீரஞ்செலுத்திய அட்டஸ்தானங்களி லொன்று. சுருமன் பிரமன் திருமால் பாண்டவர் பூசித்

தரும் பெற்றது. திரிபுரந்தனைஞ்செய்தஸ்தலம். திருநாவுக்கரசு சுவாமிகள் சூலைநோய் தவிர்த் தருளிய விடம். இதனுள் குணதர வீச்சரமெனும் ஆலயமுள்ளது. அதுகாடவனெனும் அரசன் சமண சமயமபொய்யென் றுணர்ந்து சிவப்பிரதிட்டைசெய்து பூசித்தது. மூவர் பதிகமும் பெற்றது. சந்தானசாரியரி லொருவராகிய மெய் கண்டதேவர்பால் தீக்ஷைபெற்ற மனவாசகங்கடந்தார் உண்மைவிளக்கமெனுஞ் சித்தாந்தநூல் செய்தவிடம். திருவதிகை வீரட்டானேசர். திரிபுரசுந்தரி. கெடிலநதி சூலகங்கை சக்கரதீர்த்தம் நாகசொனைநவிருக்கும். மகத நாட்டி லுள்ள சிவக்ஷேத்திரம்.

திருஅநந்தபுரம்—மலைநாட்டு விஷ்ணு ஸ்தலங்களிலொன்று. அநந்தபத்மநாபர் ஸ்ரீஹரி லக்ஷ்மிநாச்சியார் - பூதேவி - கனகசபை - ஏமகூடவிமானம் - மச்சதீர்த்தம் அநந்தசயனம். அநந்த பத்மநாபர் தமது லக்ஷ்கையைச் சிவலிங்கத்தின்மேல் நீட்டியும் பிரமனை நாபிஸ்தலத்தில் உடைததாயு மிருக்கின்றனர். அகஸ்தியர் மலைய பாவதம் மயித்திராவருணி திரிகூடாசலம் தாமிரபர்ணி முதலியோருக்குப் பிரத்தியக்ஷம். தனுகுலத்துதித்த திவாகரனெனும் யதீசுவரன் பூசித்துமுத்தியடைந்த ஸ்தலம். நம்மாழ்வார் பெரியாழ்வார் மங்களாசாசனம். இந்த க்ஷேத்திரம் மலைநாட்டரசர் இராஜதானி நகரம்.

திருஅநேகதங்காவதம்—குபேர சந்திரர்கள் பூசித்தது. அருள் வள்ளீச்சரர்-மனோன்மணி யம்மை காவதீர்த்தம்-சம்பந்தர்பாடல்.

திருஅம்பர்ப்பெருந் திருக்கோயில்—பிரமன் பூசித்த ஸ்தலம். கோச்செங்கட் சோழநாயனார் திருப்பணியுடையது. சோமாசிமாறநாயனார் திருவவதார ஸ்தானம். திருஞானசம்பந்தர் பதிகம் பெற்றது. சுவாமி பிரமபுரநாதர். தேவியார் பூங்கண்ணைப் பூங்குழலம்மை. பிரமதீர்த்தம் சோழநாட்டின் காவிரித்தென்கரையிலுள்ள சிவஸ்தலங்களிலொன்று.

திருஅம்பர் மாகாளம் — மகாகாளர் பூஜித்தஸ்தலம். இந்திராணி தம்மை சமஒப்புவிக்கப்பட்டிருந்த பொழுது அவளைச் சூரபன்மனுடன் சோக்கக்கருதி யிழுத்துச்சென்ற அஜமுகியைக் கரங்குறைத்த விடம். சோமாசிமாற நாயனார் முத்தியடைந்த க்ஷேத்திரம். இப்போது நாயனார் யாகஞ்செய்த விடத்தில் தியாகேசரும அம்மையாரும் நீசத் திருமேனியுடன் சகடையும் மதக்குடமுங் கொண்டுவந்தபடியே திருவுருக்கொண் டிருக்கின்றனர். திருஞான சம்பந்தர் பதிகம்பெற்றது. சுவாமி காளகண்டேசர். அம்பாள பக்ஷைநாயகி மாதேவி. மாகாளதீர்த்தம். சோழநாட்டில் காவிரியின் தென்கரையிலுள்ள சிவக்ஷேத்திரங்களிலொன்று.

திருஅம்பிலாலந்துறை—திருமாலயந்துறையெனவும் அன்பிலென்றும் வழங்கும். பிரமன் திருமால் வாகீசமுனி இந்திரன் இவர்கள் பூசித்துப் பேறுபெற்றது. திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் பாடியது. சுவாமி சத்தியவாகேசர். தேவியார்

கௌந்தராயகி - கொள்ளிடாதிதீர்த்தம். காவிரி வடகரையிலுள்ள சிவஸ்தலங்களிலொன்று.

திருஆரங்கம் / ஆதிரங்கம் } சோமுகாசுரன் வேதங்களை யபகரித்துச் சமுத்திரத் துட்செல்ல, அவற்றை மீட்டுத் தனக்குதரப் பிரமன் தவஞ்செய்த க்ஷேத்திரம். தக்ஷப்பிரசாபதியால் க்ஷயரோகியாம்படி சபிக்கப்பட்ட சந்திரன் பூசித்ததலமெனச் சிலநூல்கள் கூறும். அரங்கநாதன். அரங்கநாயகி. நாச்சியார். சந்திர புஷ்பகரணிதீர்த்தம். இதுமகத நாட்டிலுள்ள விஷ்ணுஸ்தலங்களிலொன்று.

திருஅரங்கம் / பெரியகோயில் } சந்திரன் தக்ஷசாபமபோம்படி தவஞ்செய்ததும், சுக்கிரன் வில்வமரத்தடியில் தவஞ்செய்து வாமனவதாரத்தில் தான்செய்த பாகத்தைப்போக்கியதும், தேவேந்திரன் அரசமரத் தடியில் தவஞ் செய்து கௌதமசாபத்தை யொழித்ததும், அக்னிபுன்னைமரத்தடியில்தவஞ்செய்து மிருத்திகா சங்கமஞ்செய்த பாதகத்தைப் பரிகரித்ததும், பிருகற்பதி மகிழ மரத்தின்கீழ்த் தவஞ்செய்து, சந்திர சங்கமததால் இழிவடைந்த தாரையைக்கலந்தவாழும் தோஷத்தைத்தொலைத்ததும், ஜனகராஜன் ஞானம் கைகூடும்படி கடம்ப மரததடியில் பூசித்ததும், சூரியன் மாமரத்தின்கீழ் பூசித்து இஷ்ட சித்திகளை யடைந்ததுமாமென வைணவ நூல்கள் கூறும். இதனைவைணவர் கோயிலெனச் சிறப்பாக வழங்குவர். ஆழ்வார்கள் பதின்மர் ஆண்டாள் மங்களாசாசனம். ஸ்ரீரங்கநாதன், நம்பெருமாள். ஸ்ரீரங்கநாயகியார். பிரணவாகிருதிவிமானம். புன்னைவிருக்ஷம் - காவிரிநதி - நவதீர்த்தங்கள் - நவதீர்த்தங்களாவன: சந்திர புஷ்கரணி வில்வதீர்த்தம, ஜம்புதீர்த்தம் அஸ்வதீர்த்தம் புன்னைதீர்த்தம் வகுளதீர்த்தம கதம்பதீர்த்தம் ஆம்ரதீர்த்தம் பலாசதீர்த்தம். இவற்றின்கண்: பரவாசுதேவர் ஸ்ரீநிவாசமூர்த்தி பிரணதார்த்திஹரப்பெருமாள் சுதர்சனர் கணபதி வாயுத்தரா அச்சுதர் அனந்தனந்தகணபதிகள சண்டகோபகணபதி மாதவசுவாமி பிருகற்பதி புருஷோத்தமன கருடாழ்வார் ருஷிகேசர்விஷ்வக்சேனர் சூரியன் இக்ஷ்வாகுஇராகவன் விபீஷணன் முதலியோர்.

இராவண சங்காரமுடித்துப் பட்டாபிஷேகங்கொண்ட இராமபிரான், தான்பெற்ற உதவிக்குப் பிரதியாகதசன்னிடத்திருந்த இந்தரங்க விமானத்தை விபீஷணனுக்குக் கொடுத்ததாகவும் அது இலங்கைக்குச் செல்லவொட்டாது தேவர்களால் தடைபடுத்தி ஆண்டிருத்தப் பட்டதென்றும் அரங்க மகாத்மிய மெனு நூல்கூறும்.

ஸ்ரீரங்கம்கெற்பக்கிரகத்தில் சேஷசயனத்தின்மீது அரங்கநாதர்பவளித்திருக்கின்றனர். உற்சவர் உபயநாச்சியார் சமேதராய் ஓர்பீடத்தமர்ந்திருக்கின்றனர். அந்தராளபிரதட்சணத்தில் விக்னேஸ்வரர், இலட்சுமி, நாராயணமூர்த்தி, நரசிம்மசுவாமி, துர்க்காதேவி வீற்றிருக்கின்றனர்.

முதல்பிராகாரத்தில், [illegible]

சிவஸ்தலம். இது காவிரித் தென்கரையிலுள்ளது. திருஆரூர்மூலட்டானத்து இரண்டாம் பிராகாரத்தில் மேற்குமுகமாய் எழுந்தருளியஸ்தலம். அசிலேசர் அல்லியங்கோதை அற்புதக்கூவதீர்த்தம். திருநாவுக்கரசுசுவாமிகள் பதிகம் பெற்றது.

**திருஆரூர்ப் பரவையுண்மண்டளி** — துருவாசமுனி பூசித்தஸ்தலம். இச்சேத்திரத்தின் மீது வருணன் விட்ட கடலை வற்றச்செய்தமை பற்றி வருணன் பூசித்தஸ்தலம். பரவையுண்மண்டளிசர். பஞ்சின்மெல்லடியம்மை. வருணபுஷ்கரணி முதலிய தீர்த்தங்கள். சுந்தரமூர்த்திஸ்வாமிகள் பாடல்.

**திருஆரூர்மும்மணிக்கோவை** — அறுபானமும்மை நாயன்மாரிலொருவராகிய சேரமானபெருமானாயனாரால் செய்யப்பட்டு, பதினோராந் திருமுறையில் சேர்க்கப்பட்டதொருபிரபந்தம்.

**திருஆரூர்மூலட்டானம்** — திரு ஆரூ[ரிற்காண்க.

**திருஆலங்காடு** — சிவபெருமான் காளியோடு நடனஞ்செய்தக்ஷேத்திரம். இந்திரன் ஆதிசேடன் சுநந்தர் முதலியோர் பூசித்த சிவஸ்தலம், தொண்டை நாட்டிலுள்ளது. காரைக்காலம்மையார் என்றும் பிரியாது நடனதரிசனஞ் செய்யுந்தலம். மாறுகொடு பழையனூர் நீலி செய்த வஞ்சனையால் வணிகனுயிரிழப்ப, தாங்கள் கூறியசொல் பிழையாது துணிந்து செந்தீக்குழியில் வேளாளரெழுபதின்மர் மூழ்கிப் புகழ் பெற்ற விடம். மூவர் பாடலும் காரைக்காலம்மையார் மூத்த திருப்பதிகமும் பெற்றது. ஊர்த்ததாண்டவேசர் வண்டார்குழலியம்மை. முத்திதீர்த்தம். பலாவிருக்ஷம். பஞ்சசபைகளி லொன்று இரத்தினசபை யெனப்படும்.

**திருஆலம்பொழில்** — அக்நிதேவனு காசுரும் அட்டவசுக்களும் பூசித்தஸ்தலம். ஆத்மநாதேசர் - ஞானாம்பிகையம்மை - திருப்பாற்குளம் காவிரிநதி. சுந்தரமூர்த்திசுவாமிகளை மழபாடிக்குவர மறந்தனையோ வென உணர்த்தியவிடம். திருநாவுக்கரசுசுவாமிகள்பாடல். காவிரித்தென்கரையிலுள்ளது.

**திருஆலவாயுடையார்** — சோமசுந்தரக்கடவுள். சங்கப்புலவருளொருவராயிருந்து தமிழாய்ந்தவர். சேரமான்பெருமானாயனாருக்குத் திருமுகமனுப்பியவர். திருவிளையாடற்புராணத்திற் கூறப்பட்ட அறுபத்துநான்கு அற்புதங்களுமியற்றியவர்.

**திருஆலவாய்** — மதுரைக்குப் பரியாயநாமம். இது பாண்டிநாடு கடலால் எல்லை மயக்குற்றபொழுது இறைவர் சித்தவடிவாய்வந்து தாமணிந்திருந்த (ஆலம் + வாய் = விடம்பொருந்திய வாயையுடைய) பாம்பினை விடுப்ப அது எல்லையைக் குறிப்பிட்டமையின் இப்பெயரேற்றது. மதுரையிற்காண்க.

**திருஆவடுதுறை** — இந்திரன் முதற் பலதேவர்களும் பலமுனிவர்களும் பூசித்த ஸ்தலம். இது நவகோடி சித்தபுரமென்றும் கோமுத்தி யென்றும் சொல்லப்படும். மாசிலாமணியீச்சுரர் - ஒப்பிலாமுலையம்மை - செம்பொற்றியாகேசர் - சிவகாமியம்மை - காவிரிநதி சிவக்கனை படர்ந்தஅரசு. திருஞான சம்பந்

ஸ்வாமிகளது தந்தையார் யாகஞ் செய்யவேண்டு மென்னும் கருத்தையுணர்ந்த, பிள்ளையார் பதிகமோதி உலவாக்கிழி பெற்றருளிய க்ஷேத்திரம். திருமூலநாயனர்ஆண் டுக்கொரு திருமந்திரமோதி மூவாயிரவருடம் கிஷ்டை கூடியிருந்து முத்தியடைந்த ஸ்தலம். திருமாளிகைத் தேவர் முத்தியடைந்தது. மூவர்பதிகமும்பெற்றது. இத்தலம் காவிரித் தென்கரையி லுள்ளது. திருக்கைலாய பரம்பரையாகிய சுப சிவாயமூர்த்திகள் ஆசாரிய பரம்பரையோர் மடாலயங் கொண்டெழுந்தருளியிருக்குந்தலம். இப்பொழுது இங்கு ஞானமுடி புனைந்து மகா சந்நிதானமாக விளங்குபவர் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாணதேசிகமூர்த்திகள். இவ்வாதீனம் நெடுங்காலமாகக் கல்வியை யபிவிர்த்திசெய்வதிலும் புலவரைச் சன்மானிப்பதிலுஞ் சிறந்து விளங்குகிறது. சித்தாந்தபானுவாந் திராவிடமாபாடியகர்த்தர் ஆசிரியர் சிவஞானயோகிகளிருந்தது மிவ்விடமே.

திருஆவினன்குடி—முருகக் கடவுள் ஆறுபடைவீடுகளி லொன்று. இது பாண்டிநாட்டிலுள்ளது. (திரு=இலக்குமி; ஆ=காமதேனு; இனன=சூரியன்; இவர்கள் பூசித்த தலமாகலின் இப்பெயரேற்றது.)

திருஆலூர்ப் பசுபதீச்சரம்—பசுக்கள் சப்த ருஷிகள் இந்திரன் முதலியோர் பூசிதஸ்தலம். பசுபதீசர் மங்களாம்பிகை - பசுத்தீர்த்தம். காவிரித்தென்கரையிலுள்ள சிவஸ்தலம். திருஞானசம்பந்தர் பாடல்.

திருஆனைக்கா—பராசர முனிவர் திருமால் கோச்செங்கட்சோழநாயனர் கௌதமர் முதலாயினேர் வழிபட்ட சிவஸ்தலம். சோழநாட்டில் காவிரிவடகரையிலுள்ளது. ஜர்புரேசுவரர் - அகிலாண்டேசுவரி - சிவகங்கைதீர்த்தம். ஜம்பு நாவல் விருக்ஷம். இத்தலம் பூர்வத்தில் ஜம்புவனமாயிருக்கையில் அங்குத்தவஞ் செய்திருந்த முனிவர் முன் உதிர்ந்த கனியொன்றை யெடுத்துச்சென்று கைலையில் சிவபெருமானுக்கு நிவேதிப்ப, இறைவர் அதனையுண்டு வித்தினை உமிய, முனிவர் அதனையுண்ண, அவ்வித்துமுளைத்து அவருடலைத் துளைத்துச் சிரமீதைத் தோன்ற, அம்முனிவர்இறைவரை அதன் கீழலில் எழுந்தருளி யிருக்கும்படி பிரார்த்திப்ப, அக்கனி கிடைத்த விடத்தை யடைகவென்ற ஆஞ்ஞையைப் பெற்று மீண்டும் அவ்வனத்தை யடைந்தனர். அதனால் சிவபெருமான் நாவலின் கீழ் எழுந்தருளியுள்ளார். ஆனை பூசித்தமையின் ஆனைக்கா. சிலம்பி பூசித்ததற்கு மகிழ்ந்து கோச்செங்கட்சோழ நாயனாராகப்பிறந்து முத்தியடைய அநுக்கிரகித்த ஸ்தலம். உறையூரிலிருந்த சோழராசன்கிரைவேயில் தன்தேவி கழுத்தி லிருந்தஆரம் சிவபிரானுக்கேற்றதெனக்கருதியவுடன், அது காவிரியாற்றில்விழ அரசன் அதன் அருமையைக் கருதிவருந்தியதை, அவ்வாரம் திருமஞ்சனக் குடத்தின் வழியாய் சிவபிரான் திருமுடியையடையாதெழுச்செய்வித்த ஸ்தலம். இத்தலத்தின் திருமதில் சிவபெருமான் சித்தராகி வேலைசெய்து கட்டுவித்ததாம் சித்தரடி கேட்குந் திருநீற்றுமதில்

கூலியாகக் கொடுத்தும் கட்டுவித்ததுபற்றி அது திருக்கிட்டான் திருமதிலென வழங்கு மென்பர். மூவர் பாடலும் ஐயடிகள் காடவர்கோன் க்ஷேத்திரவெண்பாவும் ஓதியருளப்பெற்றது. காளமேகப் புலவர்க்கு அம்பாள் அநுக்கிரகம் புரிந்து மகா கவி வாக்கியதும் இவ்விடமே.

திருஆனைக்கோயில்--வைகாதியர் துருவாசர் பூசித்தஸ்தலம். வாலிபூசித்துப்பேறடைந்தது. ஐராவதம் சிவநிர்மாலியத்தைச் சிதைத்துத் துருவாசர் சாபத்தாற்காட்டானையாய்ப் பிறந்து பூசித்தவிடம். திருவாலீச்சுரர் க்ஷீரவாராம்பாள்-அக்கினி தீர்த்தம். இது தொண்டைநாட்டுச்சிவஸ்தலங்களிலொன்று. பாடலில்லை.

திருஇடும்பாவனம் — இடும்ப னெனு மரக்கன் பூசித்து வலிமை பெற்ற இடம். புலகர் முதலிய ருஷிகள் தவஞ்செய்தது. சற்குணநாதேசுரர் - மங்களநாயகி - சுமுக புஷ்கரணி. காவிரித் தென்கரையி லுள்ளது. திருஞானசம்பந்தஸ்வாமிகள் பாடல்.

திருஇடைச்சுரம் — கௌதமர் சநத்குமாரர் பூசித்தது. இடைச்சுரநாதேசுரர் - ஞானபுரீசுரர் - இமயமடக்கொடியம்மை- கோவர்த்தனாம்பிகை - கோவர்த்தனகிரி - இந்திர தீர்த்தம். திருஞானசம்பந்தர் பதிகம். தொண்டைநாட்டிலுள்ளது.

திருஇடைமருதூர்—காவிரித் தென்கரையி லுள்ள சிவ ஸ்தலங்களி லொன்று. மருதப்பேசர் - நன்முலைநாயகி - காவிரிநதி - பூசத்துறை தீர்த்தம் - திருக்குளதீர்த்தம். பல தேவர்கள் பூசித்தது. மதுரையிலிருந்த வரகுணதேவருக்குற்ற பிரமஹத்தி நீங்கியவிடம். அப்பழியிலுருவம் இன்றும் கீழ்க்கோபுர வாயிலில் நிற்கும். மூவர் பதிகமும், கருவூர்த்தேவர் திருவிசைப்பாவும் பட்டினத்தடிகள் பிரபந்தமும் ஓதியருளப்பெற்றது.

திருஇடையாறு — சுகப் பிரமருஷி பூசித்த சிவஸ்தலம். மகதநாட்டிலுள்ளது. இடையாற்றீசர் - சிற்றிடைநாயகி - பெண்ணைநதி தீர்த்தம். சுந்தரமூர்த்திசுவாமிகள்பதிகம்.

திருஇந்தளூர்—சோழநாட்டுவிஷ்ணு ஸ்தலங்களி லொன்று. சந்திரனுக்குப் பிரத்தியக்ஷம், குலசேகராழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். சுகந்தவனநாதர் - புண்டரீகவல்லி - வேதசக்கர விமானம் - இந்துபுஷ்கரணி - வீரசயனம்.

திருஇந்திரநீலபருப்பதம்— இந்திரன் பூசித்தது. அர்ச்சுனன் பாசுபதம் பெற்றது. வடநாட்டிலுள்ளது. திருஞானசம்பந்தர் பாடல். நீலாசலநாதேசர் - நீலாம்பிகை - இந்திர தீர்த்தம்

திருஇரட்டைமணிமாலை — பதினோராந் திருமுறைப் பிரபந்தங்களி லொன்று. இது காரைக்காலம்மையார் அருளிச்செய்தது.

திருஇராதாபுரம்—வரகுண பாண்டியன் வேட்டையாடுகையில் சிவதரிசனத்தை மறந்து மாலைக்காலமாகி இனித் தரிசனம் கிடைக்காதென வருந்தி வனத்திலேயே வசிக்கையில் தரிசனமளித்த ஸ்தலம். பாண்டிநாட்டிலுள்ளது. வரகுணபாண்டியேசுவரர் - நித்திய கல்யாண

ணியம்மை.

திருஇராமேசநல்லூர்— அகஸ்தியரும் ஸ்ரீராமரும் பூசித்த சிவஸ்தலம். சீதைக்காக இராவணனுடன்போர் செய்திறந்த சடாயுவுக்கு இராமன் ஈமக்கடன் செய்தவிடம். பாண்டிநாட்டிலுள்ளது. இராமநாதேசர் - குணக்குன்றம்மை - தாமிரபர்ணிநதி - சடாயு தீர்த்தம் - இதற்குப் பதிகமில்லை.

திருஇராமேச்சுரம்—அகத்தியர் அக்கினி அசுவத்தாமா அனுமான் இராமர் இலக்ஷ்மணர் சீதை கவிசபு வானரர்கள் காசிபர் சரசுவதி சங்கரபாண்டியன் தருமகுப்தன் முதலியோர் பூசித்த சிவஸ்தலம். இதுபாண்டிநாட்டிலுள்ளது. இராமர் சமக்குற்ற பிரமஹத்தி நீங்கப் பூசித்தது. இராமநாதேசர்பர்வதவர்த்தனி அகஸ்தியதீர்த்தம் அமுத தீர்த்தம் தநுஷ்கோடி தீர்த்தமுதலிய தீர்த்தங்கள். இதனைத் தரிசித்த மாத்திரமே பிரமஹத்தியாதி தோஷங்களெல்லாம் நீங்கும். இதுவே சேது. வடக்கே மிக்கதூரதேசத்திலினின்றும் எண்ணிறந்தோர் இங்குவந்து நீராடுவர். இத்தலத்தில் சேதுமாதவரெனுந் திருமாலாலயமுமுண்டு.

திருஇரும்பூளை—ஆலங்குடியென்றும் பெயருறும். காவிரித்தென்கரையிலுள்ள சிவக்ஷேத்திரம். விசுவாமித்திரர் முதலியோர் பூசித்தது. காசியாரணியேசுரர் - ஏலவார்குழலி- காசிதீர்த்தம் - திருஞானசம்பந்தர் பதிகம்.

திருஇரும்பைமாகாளம்—தொண்டைநாட்டிலுள்ள சிவஸ்தலங்களிலொன்று. அரிகரபுத்திரர்சேனைத்தலைவராகிய மாகாளர் பூசித்தது. மாகாளேசர் - குயின்மொழியம்மை - மாகாளதீர்த்தம்-பாடலில்லை.

திருஇலம்பையங்கோட்டூர்—தொண்டைநாட்டுச் சிவஸ்தலங்களிலொன்று. சந்திரன் பூசித்தது. சந்திரசேகரேசர் - கோடேந்துமுலையம்மை - சந்திரதீர்த்தம் - திருஞானசம்பந்தர் பாடல்.

திருஇளையான்குடி—காவிரித்தென்கரையிலுள்ள தொருசிவஸ்தலம். இந்நகரமே இளையான்குடி மாறநாயனார் திருவவதார க்ஷேத்திரம்.

திருஇன்னம்பர்— காவிரியின் வடகரையிலுள்ள ஒருசிவஸ்தலம் அகத்தியமுனிவர் பூசித்து இலக்கணோபதேசம்பெற்றதும், சிவபெருமான் கணக்கப்பிள்ளைகளுளொருவராயிருந்து வெள்ளோட்டைவைத்துக் கோயிற் கணக்கொன்றுங் குறையாமல் அரசனிடம் ஒப்புவித்ததும் இத்தலமே. அம்பர்முத்தீசர் - எழுத்தறிவித்தநாதர் - பூங்கொம்பனை - கொந்தார் பூங்குழலம்மை - ஐராவததீர்த்தம். திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர்பாடல்.

திருஈங்கோய்மலை—காவிரிவடகரையிலுள்ள ஒருசிவஸ்தலம். அகஸ்தியர் பூசிக்கச் சமயம்வாய்க்காமல் ஈவடிவாய்ச் சென்று பூசித்தமையின் இப்பெயரேற்றது. திருவிங்கநாதமலையென்றும் பெயர். திருஞானசம்பந்தர் பதிகமும் மாணிக்கவாசகஸ்வாமிகள் "ஈங்கோய் மலையினெழிலது காட்டியும்" என்றருளிச் செய்யப்பெற்றதுமாம். மரகதாசலேசுவரர் - மரகத வல்லியம்மை - அமுததீர்த்தம் - ஆண்டிய

தீர்த்தம்.

திருஈங்கோய்மலையெழுபது—பதினொராந் திருமுறைப் பிரபந்தங்களி லொன்று. இது நக்கீரதேவ நாருளியது.

திருஉசாத்தானம்—இராமன் லக்ஷ்மணன் சாம்புவன் சுக்கிரீவன் அநுமான்முதலியோர் பூசித்த சிவஸ்தலம். காவிரித் தென்கரையி லுள்ளது. மந்திரபுரேசர் - பெரிய நாயகி - சுக்கிரீவதீர்த்தம். திருஞான சம்பந்தரற் பதிகம்பெற்றது.

திருஉத்தரகோசமங்கை—பாண்டி நாட்டுச் சிவஸ்தலங்களி லொன்று. பிருகு ருஷி சாண்டில்லிய ருஷி கன்கை அக்கினிமுதலியோர் பூசித்தது. மணிவாசகப் பெருமானுக்குச் சிவபெருமான் தரிசனந் தந்தருளி நீத்தல் விண்ணப்ப முதலிய பல பாடல்களைப் பெற்றருளிய ஸ்தலம்.

திருஉந்தியார்—சித்தாந்த சாத்திரம் பதினான்கனு ளொன்று. திருவியலூர் உய்யவந்த தேவ நாயனா ரருளியது. நாற்பத்தைந்து கலித்தாழிசைகளை யுடையது. சிவாகமஞான பாதப்பொருளைச் சுருக்கி விளக்குவது.

திருஉரோமேச்சுரம்—உரோமருஷி பூசித்து நித்தியத்துவம் பெற்ற தலம். பாண்டி நாட்டி லுள்ளது. உரோமேச்சுரர் - இமயப்பாவை - தாமிரபர்ணிநதி - உரோமேச தீர்த்தம். பாடலில்லை.

திருஊரகம் — தொண்டை நாட்டு விஷ்ணு ஸ்தலங்களி லொன்று. ஊரகமெனும் ஆதிசேடனுக்குப் பிரத்தியக்ஷம். திரிவிக்கிரமர்-அமுதவல்லி நாச்சியார் - சாரஸ்ரீகரவிமானம் - சேஷதீர்த்தம் - மேற்கே திருமுக மண்டலம். நின்ற திருக்கோலம். திருமழிசையாழ்வார்திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

திருஊறல்— தக்கோலமென வழங்கும், தொண்டை நாட்டி லுள்ளதொரு சிவஸ்தலம். உமாதேவிபூசித்தது. இடபத்தின் வாயினின்று நீர் ஊறிக்கொண்டிருத்தலின் ஊறலெனப்படும். திருஞானசம்பந்தராற் பாடப்பெற்றது.

திருஎதிர்கொள்பாடி—சோழநாட்டுச் சிவஸ்தலங்களி லொன்று. அயிராவதம் பூசித்தது. வேள்வி குடியில் மணவினைமுடித்த அரச குமாரன் தன் மனைவியுடன் செல்லுகையில் சிவபெருமான் அவன் மாதுலன் போல அழைத் துபசரித்ததனால் இப்பெயர் பெற்றது. அயிராவதேசர் - மலர்க்குழன் மாதம்மை - அயிராவததீர்த்தம் - சுந்தரமூர்த்திசுவாமிகள் பாடல்.

திருஎயினனூர்—காவிரித்தென்கரையிலுள்ள தொரு சிவஸ்தலம். ஏனாதிநாத நாயனார் திருவவதார க்ஷேத்திரம்.

திருஎருக்கத்தம்புலியூர்— ராஜேந்திர பட்டணமெனவும் பெயர் பெறும். இது நடுநாட்டிலுள்ள சிவஸ்தலங்களிலொன்று. நாகராசன் பூசித்தது. வெள்ளெருக்கின் ஸ்தலவிருக்ஷம். நீலகண்டேசர். நீலமலர்க்கண்ணி. மணிமுத்தாநதி தீர்த்தம். திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனார் திருவவதாரஞ் செய்தவிடம். திருஞானசம்பந்தர் பாடல்.

திருஎவ்வுளூர் — தொண்டை நாட்டு

விஷ்ணு ஸ்வஞ்சனியென்று. பிரத்யும்னனெனு மாசன் நசுஞ் செய்து முத்தி யடைந்தது. சவுசிகனெனும் வேதியன் சண்டாளசாங்கத்திய பாவத்தைப் போக்கியது. அருகிலுள்ள சக்கரமெனும் கிராமத்தில் தருமசேனனிடம் கனகவல்லியெனும் பெயரோ டவதரித்த இலக்ஷ்மி தேவியை யுக்த வயதில் திருமால் மணங்கொண்டனர். சாலிகோத்திர முனிக்குப் பிரத்தியக்ஷம். வீரராகவப்பெருமான் கனகவல்லித்தாயார் விஜயகோடி விமானம் இருத்தாபநாசினி தீர்த்தம் புஜங்கசயனம் வீக்ஷாரண்ய க்ஷேத்திரம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

திருஎழுகூற்றிருக்கை — (1) திருஞானசம்பந்தமூர்த்தி ஸ்வாமிகள். (2) நக்கீரதேவர் (3) திருமங்கை ஆழ்வார்கூறிய பிரபந்தங்கள்.

திருஎறும்பியூர்—காவிரித்தென்கரையிலுள்ள தொரு சிவஸ்தலம். கரஷணுரியரும், எறும்புருவேற்ற தேவர்களும் பூசித்து வரம்பெற்ற இடம். எறும்பீச்சுரர். நறுங்குழலாயகி பிப்பிலிகதீர்த்தம். திருநாவுக்கரசர் தேவாரம் பெற்றது.

திருவேகம்பம்—தொண்டைநாட் டின்னது. காஞ்சிபுரமென வழங்கும். முத்தித்தலங்கள் ஏழனுளொன்று. வேதங்களே மாவிருக்ஷமாகிக் கம்பாநதிக்கரையி லிருக்கப்பெற்றது. பன்னிரு திருநாமங்களும், சித்தி தீர்த்தமுதலிய பல தீர்த்தங்களுமுடையது. ஏகாம்பரநாதர் காமாக்ஷியம்மை காமகோடிபீடம் கம்பாநதிதீர்த்தம். இவ்வாலயத்தில், பிரமன் பூசித்த வெள்ளக் கம்பமும், விஷ்ணுபூசித்த கள்ளக் கம்பமும், உருத்திரன் பூசித்த நல்லக் கம்பமும், வண்டாசுரன் பிரமனிடம் பெற்ற வரத்தால் உயிர்கடோறும் விரவிநின்று வீரியமுண்டாமையால் மெலிந்த தேவர்கள் வேண்டுகோளுக்கிரங்கி, சிவபிரான் உயிர்களினை யாக குண்டத்தவி யாக்கி வண்டாசுரனைச் சங்கரித்த திருமயானமும், வாலி பூசித்துத் தன்னை யெதிர்த்தோர் வலியிற் பாதியைப்பெறவரம்பெற்ற வாலீச்சரமும், ஆகிய ஐந்துஞ் சிறந்தன. அன்றியும் அந்நகரில், திருக்கச்சபாலயம் காரோணம் பணாதரீச்சுரம் சுரகரீசம் பராசரீசம் வீரட்டகாசம் மாண்டீசம் உருத்திரகோடீசம் மகாசாத்தன் றளி யெனுமிவையும், திருக்கச்சிநெறிக்காரைக்காடு திருவேகம்பம் திருக்கச்சிமேற்றளி திரு அநேகதங்காவதம் திரு ஓணகாந்தன்றளி முதலியனவும் பிறவுமுள. இவற்றன் இறுதியிலுள்ள ஐந்து தலங்கட்குத் தனித்திருப்பதிகங்களுள.

இக்காஞ்சி யானது உமாதேவியார் ஏகம்பநாதரை மிருத்திகையாற்ரூபித்துப்பூசிப்ப, எம்பெருமான் அவர் அன்பினைச் சோதிக்கக் கம்பாநதியைப்பெருகுவிப்ப, அம்மையார் அன்புமேலீட்டினால் தழுவிக்கொள்ள, சிவபெருமான் மனமுருகி அம்மையாரது முலைச் சுவடும் வளைத்தழும்பும் பெற்ற ஸ்தலம். இது வெகுகாலம் பிரபல இராசதானியாக விருந்தது. உமாதேவியார் இருநாழி நெற்கொண்டு முப்பத்திரண் டறங்களும் வளர்த்தரு

ளியவிடம். அம்மையாருக்குக் காம
கோட்டமென்றும் ஆலயமும், முரு
கக்கடவுளுக்குக் குமரகோட்டம்
என்றும் ஆலயமுமுள.

சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் "வாழ்
ந்துபோதிரே" எனப் பதிகமோதி
ஒருகண் பெற்றதும், திருக்குறிப்
புத் தொண்டநாயனர் அவதரித்து
முத்தியடைந்தது மாகிய ஸ்தலம்.
ஐயடிகள் காடவர்கோன் க்ஷேத்தி
ரவெண்பாவும் மூவர் பதிகமும்
பெற்றது. இதற்குப்பன்னிருதிருப
பதிகங்களுள.

இத்தலத்தில் அதிசயத்தையும
விநோதத்தையும் விளைக்கும் பல
விஷயங்களுள. அவற்றுள் ஒவ்
வொன்றை யடைந்தோர் நான்கு
வேதங்களினும்நிபுணராகி, முறை
யேசூரியன், பிரமதேவன், ஸ்ரீமகா
விஷ்ணு, சாம்பமூர்த்திஇவர்களைத
ரிசிக்க அருகராகிப் பின்பு சாயுச்
சிய முடையத்தக்க நான்கு சிவா
சனங்களும்;

பூர்வபுண்ணிய மிருந்த மனிதர்
பிரவேசித்த மாத்திரத்தில் முறை
யே சர்வாபரணாதி அலங்கிருதரா
தல்; தேவேந்திர போக முதலிய
வனுபவித்தல்; விருத்தாப்பியர்பா
லியராதல்; ஊமைகள் சகலகலா
வல்லவராதல்; அழகில் மிகுந்தவ
ராதல் ஆகியவற்றைப் பெற்றுமுடி
வில் சாயுச்சியமடைதல்ஆக்கவல்ல
ஐந்து வேதிகைகளும்;

சதாகால மயிர்தரு சொரிகின்ற
மாமரம், பூவில்லாமல் காய்க்கிற
புளியமரம், தங்க சொரூபமான
அத்திமரம், இவற்றின்பலனை யனு
பவிப்பவர் காயசித்தி யடைகின்ற
னர்; நிழலில்லாத பொன் மரம்,
விருட்ச முழுவதும் புட்பமாகவே
யிருக்கும் இலுப்பை மரம், இவற்
றின் ஸ்பரிசம்படதேககாந்தியடை
வர் இத்தகைய ஐந்து விருக்ஷங்
களும்;

தன்தொனியினு லாகாயத்திலி
ருந்து மேகங்களை வரவழைக்கும்
மயில் ஒன்று; வேதாந்தக் கியான
முடையதாகி, கோவிந்த சப்தத்தை
ஸ்மரிக்கும் கிளிகள் கூட்டத்திற்
சேர்ந்து வாசம் செய்கின்ற பச்
சைக்கிளியொன்று; சோதிட சாஸ
திரத்திற் தேர்ந்த மைனு பட்சி
யொன்று; சர்வக்கியானமுள்ளதும்
சாதுஜனங்களுக்குப் பிரீதியுடை
யதுமாகிய புறா ஒன்று; சர்வசங்
கீத கியானமுள்ளதும், அனேகவர்
ணமுள்ளதுமாகிய கோகுலக்கபட்
சியொன்று; சர்வா பீஷ்டங்களையும்
கொடுத்துவரும் சக்கரவாளப்பட்சி
ஒன்று ஆகிய ஆறுபட்சிகளும்;

முழுகினோருக்கு முறையேபொ
ன்நிறக்காந்தி, நவரத்தினக் காந்தி,
அபீஷ்டசித்தி, சிரேஷ்டவிருத்தி,
மோட்சவிருத்தி, ஞான விருத்தி,
பாபநிவர்த்தி, வியாதிநிவர்த்தியைத்
தரும் ஏழு சரசுகளும்;

தம்மில் முழுகினவருக்கு ஒன்
றினுல் பகற்காலத்தில் சந்திரதரிச
னமும்; மன்றொன்றினுல் இராக்
காலத்தில் சூரியதரிசனமும்; மற்
றொன்றினுல் உதயத்தில் தங்கநிற
மாயும், மத்தியானத்தில் வெள்ளி
நிறமாயும், சாயங்காலத்தில் சிகப்
புநிறமாயும் பிரகாசிக்கும் மூன்று
காம்புகளையுடைய ஒரு தாமரைப்
புட்ப தரிசனமும்; மற்றொன்றி

பூசித்தது. அமிர்தகடேசர் சோதி மின்னம்மை அமுததீர்த்தம் திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் பாடல் இது மேலக்கடம்பூரென்றும் வழங்கும்.

திருக்கடவூர்மயானம்—காவிரித்தென்கரையிலுள்ள சொரு சிவஸ்தலம். பிரமன் சிருஷ்டிகைகூடும்படி ஒருகாலத்திற் பூசித்தது. பிரமபுரேசர் மலர்க்குழல் மின்னம்மை. பிரமதீர்த்தம் காசி தீர்த்தம். பங்குனிமாத அசுவினி நக்ஷத்திரத்தில் கூபத்திற் காசிகங்கை வருதலின் ஸ்நானவிசேஷம். மூவர்பதிகமும் ஐயடிகள் காடவர்கோன் க்ஷேத்திர வெண்பாவும் ஏறப் பெற்றது

திருக்கடவூர்வீரட்டானம்— காவிரித்தென்கரையிலுள்ளது. சிவபெருமான்வீரஞ்செலுத்திய அஷ்டவீரட்டத்தொன்று. மார்க்கண்டேயருக்காக இயமனை யுதைத்த விடமிதுவே. இது காசியில் நிகழ்ந்ததாகவும் நூல்கள் மாறுபடக் கூறும். வீரட்டானேசர் அபிராமித் தாயம்மை. வில்வவிருக்ஷம் சிவகங்கைத் தீர்த்தம். காரிநாயனார் குங்கிலியக்கலயநாயனார் அபிராமிபட்டர் திருக்களித்துப்படியார் இயற்றிய உய்யவந்ததேவ நாயனார் இவர்கள் ஜனன க்ஷேத்திரம். மூவர் பதிகமும் பெற்றது.

திருக்கடன்மல்லை-தொண்டைநாட்டு விஷ்ணுக்ஷேத்திரங்களிலொன்று. மகாபலிபுரமென வழங்கும். புண்டரீகருஷிக்குப் பிரத்தியக்ஷம். நித்தியகல்யாணத்துறைவர் நிலமங்கைநாச்சியார் ககனாகிருதி விமானம் கருடநதிதீர்த்தம் புஜங்கசயனம் கிழக்கே திருமுக மண்டலம் பூதத்தாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

திருக்கடிகாசலம்—தொண்டை நாட்டிலுள்ள விஷ்ணு க்ஷேத்திரங்களிலொன்று. இது சோளிங்கபுரமெனவழங்கும். இம்மலை 14 சிகரங்களையுடையது. தேவேந்திரன் வேண்டுகோளால் பலராமன் அலப்படையைப் பிரயோகித்துக் கர்வமடக்கின பர்வதம். இரணிய சம்காரத்தால் உக்கிர சொரூபியாயிருந்த நரசிம்ஹ மூர்த்தியைப் பிரகலாதாழ்வார் துதித்துச் சாந்தப்படுத்தியதலம். சிறியதிருவடிக்குப் பிரத்தியக்ஷம். யோகநரசிம்மர் அக்காரக்கனிப்பெருமாள் அமிர்தவல்லி நாச்சியார் சிம்மகோஷ்டதி விமானம் அமிர்ததீர்த்தமுதலிய இருபத்திரண்டு தீர்த்தங்கள். பேயாழ்வார் திருமங்கையாழ்வார் நம்மாழ்வார் மங்களாசாசனம்.

திருக்கடிக்குளம் — காவிரித் தென்கரையிலுள்ளது. கற்பகப் பிள்ளையார் பூசித்துச் சிவபிரானிடம்மாம் பழம் பெற்றது. கைப்பனுளமெனவும் வழங்கும். கற்பகேச்சரர் சௌந்தரநாயகி விநாயகர் கண்ட தீர்த்தம் திருஞானசம்பந்தர்பாடல்.

திருக்கடித்தானம்—மலைநாட்டு விஷ்ணுஸ்தலங்களிலொன்று. அற்புதநாராயணன் கற்பகவல்லித் தாயார் புண்ணியகோடி விமானம் பூமிதீர்த்தம். உருக்குமாங்கதனுக்குப் பிரத்தியக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாசனம்.

திருக்கவொய்க்கரைப்புத்தூர்— காவி

ரித்தென்கரையி லுள்ளது. ஆண்டாள்கோவிலென வழங்கும். காசிபர் முதலிய ருஷிகள் பூசித்தது. சொர்ணபுரேசர் சிவாம்பிகை சொர்ணதீர்த்தம். திருநாவுக்கரசு சுவாமிபாடல்.

திருக்கடைக்காப்பு—திருஞான சம்பந்தஸ்வாமிகள் ஒதியருளியமூன்று திருமுறைகட்கும் வழங்கும் சிறப்புப்பெயர். இதனை "மானாப்பமைச் சம்பந்தர் வாசேர் வன்றொண்டர் வாத ஆரர், பூவாயிலை தேறலெனுந் தமிழ்மறையாந் திருக்கடைக் காப்புச்சேர் தானுக், தேவாரத்திருப்பாட்டேத் திருவாசகமுமுறையாற் செப்புகின்ற, எவாயே காவயாம் பலக்கடலைக் கடக்க முத்தி கரைசேர் தற்கே."—எனனும் பண்டைப் பெரியோர் கூற்றுணர்க.

திருக்கடைமுடி—சோழநாட்டுச் சிவஸ்தலங்களி லொன்று. பிரமன் பூசித்தது. கடைமுடிநாதர் அபிராம்பிகை கருணாதீர்த்தம் திருஞான சம்பந்தர் பதிகம்பெற்றது.

திருக்கணமங்கலம்—காவிரித் தென் கரையிலுள்ள தொரு சிவஸ்தலம். அறுபான்மும்மை நாயன்மாரிலொருவராகிய அரிவாட்டாய நாயனார் முத்தியடைந்த க்ஷேத்திரம்.

திருக்கணமலை — திருக்கோணமலையிற் காண்க.

திருக்கண்டியூர்—காவிரித்தென்கரையிலுள்ளது. (1) இங்குள்ள சிவாலயம் அஷ்டவீரட்டத்தொன்று. பிரமன் சிரங்கொய்த ஸ்தலம். திருமகள் பூசித்தது. வீரட்டேசுவரர் மங்களநாயகி காவிரிநதி தீர்த்தம். திருஞான சம்பந்தர் திருநாவுக்கரசர் பதிகம். (2) விஷ்ணு ஆலயம் திருமங்கை யாழ்வார் மங்களாசாசனம்.

திருக்கண்ணங்குடி—காவிரித் தென்கரையி லுள்ள தொரு விஷ்ணு க்ஷேத்திரம். பிருகு வசிஷ்டருக்கும் கௌதம முனிக்கும் பிரத்தியக்ஷம். சாமளமேனிப் பெருமாள் அரவிந்தவல்லி நாச்சியார் உத்பல விமானம் ஸ்ரவணபுஷ்கரணி - திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

திருக்கண்ணபுரத்தாச்சான்—வைணவாசார்ய குருபதிகள் எழுபத்து நால்வரி லொருவர்.

திருக்கண்ணபுரம்—காவிரித் தென் கரையில் ஒரு விஷ்ணு ஸ்தலம். கண்ணுவருக்குப் பிரத்தியக்ஷம். சௌரிராஜப் பெருமாள் கண்ணபுரநாயகி உத்பலாவிதக விமானம் நித்தியபுஷ்கரணி. நம்மாழ்வார் குலசேகராழ்வார் பெரியாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

திருக்கண்ணப்பதேவர் திருமறம் — நக்கீரரும் கல்லாடரும் தனித்தனி இப்பெயரால் ஒவ்வொருபிரபந்தஞ்செய்தனர். இவ்விரண்டும் பதினொராந் திருமுறையிற் சேர்க்கப்பட்டன.

திருக்கண்ணமங்கை—காவிரித்தென் கரையில் ஒரு விஷ்ணு க்ஷேத்திரம். வருணனுக்கும் உரோமசருக்கும் பிரத்தியக்ஷம். பக்தவத்சலப்பெருமாள் அபிஷேகவல்லித் தாயார் உத்பலவிமானம் தரிசன புஷ்கரணி திருமங்கை யாழ்வார் மங்களாசாசனம்.

திருக்கண்ணார்கோயில்—சோழநாட்டிலுள்ள தொரு சிவக்ஷேத்திரம்.

இந்திரன் பூசித்தது. கண்ணாயிரேசுரர் முருகுவார்கோதையம்மை இந்திரதீர்த்தம் திருஞானசம்பந்தர் பாடல்.

திருக்கயிலாயம்—கைலாசகிரி வெள்ளியங்கிரி, கொடித்தான்மலை, திருமலை, எனப் பலநாமங்களுள்ளது. கயிலாயநாதேசுவரர், பார்வதியம்மை, மானசதீர்த்தம். சிவபெருமான், என்னம்மையே! வாவென்றருளிச் செய்யப்பெற்ற காரைக்காலம்மையார் அற்புதத் திருவந்தாதி, திருவிரட்டை மணிமாலை, இவைகளைத் தரித்துக் கொண்டு தலையால் நடந்தடைந்ததலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளுடன் எழுந்தருளிய சேரமான்பெருமா ணாயனார் ஞானவுலாப்பாடி அரங்கேற்றியதலம். இதில் சிவபெருமான் ஆன்மாக்களுக்கு அனுக்கிரகிக்கும் பொருட்டு மான, மழு, சதுர்புஜ, காளகண்ட, திரிநேத்திர, சடாதர, கங்காதர, சந்திரசேகர, பஸ்ம, ருத்ராட்சதரராய், உலக மாதாவாகிய உமாதேவியாரோடுகூடரிஷபாரூடராய்த் தம்தருட்சத்தியாற்றிருமேனி கொண்டெழுந்தருளி, விஷ்ணு பிரமன் இந்திராதி பிரமதகணங்கள் சேவிப்பக் கையில் வேத்திரக் கோல் தாங்கிய நந்தியெம்பெருமானுற் காக்கப்பட்ட திருக்கோலக்கம் பெற்றதலம். திருநாவுக்கரசு சுவாமிகள் கால்பட்டனவும் தேயச் சென்றும் காணப் பெறாது மீண்டருளித் திருவையாற்றிலே காணப்பெற்ற தலம்; சனகசநந்தன, சனாதன, சனற்குமாரருக்கு ஞானோபதேசஞ் செய்தருளிய தலம். அகஸ்திய முனிவருக்கு இயற்றமிழையுரைத்தருளிப் பொதியமலைக்கனுப்பிய தலம். இதன் பலசிறப்பும் விரிவஞ்சி விடப்பட்டது. சைவசமயாசாரியர்களாகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகளாகிய இம்மூவர்களால் திருப்பதிகம் சாற்றப்பெற்றன்னது.

திருக்கரம்பனூர்— காவிரி வடகரையில் ஒரு விஷ்ணுஸ்தலம். கதம்ப மகாருஷிக்கும் உபரிசரவசுவுக்கும் திருமங்கையாழ்வாருக்கும் பிரத்தியக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். புருஷோத்தமன் பூர்வாதேவி உத்தியோக விமானம் கதம்பதீர்த்தம் வாஸுமாம புஜங்கசயனம்.

திருக்கரவீரம்—காவிரித் தென்கரையில் சிவஸ்தலம். கௌதமர் முதலிய முனிவர் பூசித்தது. கரவீரேசர் பிரத்தியக்ஷமின்னம்மை அனவரததீர்த்தம். திருஞானசம்பந்தர் பாடல்.

திருக்கரிவலம்வந்தநல்லூர்— பாண்டிநாட்டுச் சிவதலங்களி லொன்று. திக்பாலர்கள் பூசித்தது. இத்தலம் காடாயிருக்கையில் வேட்டைக்குச்சென்ற குலசேகர பாண்டியன் ஒருயானை புதரைவலம்வந்து சிவகணமாய்ச் செல்லக்கண்டு அப்புதரைவெட்டிப் பார்த்தப்போது வெளியிய சிவலிங்கப்பெருமானைத் தரிசித்துப் பால்வண்ண நாதரென்று திருநாமமிட்டுத் திருப்பணி செய்து பல பிரபந்தங்களால் துதி

த்தன. இது மேற்காட்டிய காரண
த்தால் இப்பெயர்பெற்றது. இதற்
குத் தேவாரமில்லை.

**திருக்கருகாவூர்**—காவிரித்தென்கரை
யில் ஒரு சிவ ஸ்தலம். சந்திரன்
இராசிகள் பூசித்தது. முல்லைவனே
சர் கரும்பனையாளம்மை அமுத
தீர்த்தம். திருஞானசம்பந்தர் தே
வாரம் பெற்றது.

**திருக்கருக்குடி**—காவிரித்தென்கரை
யில் ஒரு சிவஸ்தலம். விஸ்வாமித்
திரர் சற்குணராசன் மார்க்கண்டே
யர் இந்திரன் இவர்கள் பூசித்தது.
சற்குண லிங்கர் சர்வாலங் கிருத
மின்னம்மை யமதீர்த்தம் சற்குண
தீர்த்தம். திருஞானசம்பந்தர்பாடல்.

**திருக்கருப்பறியலூர்** — காவிரி வடக
ரையில் ஒருசிவஸ்தலம். இந்திரன
ஒருகாலத்தில் இறுமாப்புடன் கை
லைக்குச்செல்ல, பூதவடிவோ டெ
திர்ப்பட்ட சிவபிரானை யுணராது
குலிசத்தாலெறிய, சிவபெருமான
கோபித்து உக்கிரவடிவுகாட்ட, இந்
திரன்முதலிய இமையவர் பிரார்த்
தித்தமையின் கோபாக்கினியை
மேலைக்கடலிலெறிந்து இந்திரனு
க்கு அநுக்கிரகித்த ஸ்தலம். அக்
கோபமே ஜலந்தரனுயது. குற்றம
பொறுத்தநாதர் கோல்வளைநாயகி
இந்திரதீர்த்தம் சூரியதீர்த்தம் திரு
ஞானசம்பந்த சுவாமிகள் சுந்தர
மூர்த்திகள் திருப்பதிகம் பாடப்
பெற்றது.

**திருக்கருவிலி**—காவிரித் தென்கரை
யில் ஒரு சிவஸ்தலம். சற்குணரா
சன் பூசித்துப் பிறப்பை நீக்கியது.
சற்குணேசர் சர்வாங்கநாயகி சற்
குணதீர்த்தம் திருநாவுக்கரசுசுவாமி
கள் தேவாரம் பெற்றது.

**திருக்கருவூர்த்திருவானிலை**—கொங்கு
நாட்டுச் சிவஸ்தலங்களிலொன்று.
பிரமன் அயர்ந்து சிருஷ்டிபுரியா
மல் காமதேனு பூசித்துச் சிருஷ்டி
நடத்தினமையின் ஆனிலை யென்
றும், கருப்பூரி யென்றும் பெயர்
திக்பாலர்கள் சுக்கிரன் முசுகுந்தன்
கோபிநாதன் முதலியோர் பூசித்
தது. விபண்டனெனும் வேடன்
பாபரூபியாயிருந்தும் ஆலயத்திற்
களவுசெய்யக்கருதி மார்கழித்திரு
விழாவில் அடியார் வேடந்தரித்துச்
சென்று ஜனநெருக்கத்தி லகப்பட்
டிறந்து சிவதரிசனத்தால் முத்தி
பெற்ற தலம். பசுபதீசுவரர் திரு
பாகவல்லி ஆம்பிராவதிநதி பிரமதீர்
த்தம் நாடகதீர்த்தமுதலிய தீர்த்
தங்கள். திருவிசைப்பா கருவூர்த்
தேவர் அவதரித்து முத்தியடைந்ததும், எறிபத்த நாயனார் சிவ
காமியாண்டார் புகழ்ச்சோழ நாய
னார் இவர்கள் முத்தி யடைந்ததும்
இந்த க்ஷேத்திரமே. திருஞானசம்
பந்தசுவாமிகள் பாடல்பெற்றது.

**திருக்கலயநல்லூர்**—காவிரித் தென்க
ரையில் ஒரு சிவக்ஷேத்திரம். இது
சாக்கோட்டை யென வழங்கும்.
தேவர்கள் அமிர்தம்பெற்ற ஆனந்
தத்தால் அருச்சித்தது. அமிர்தகல
நாதர் அமிர்தவல்லியம்மை அமிர்
ததீர்த்தம். சுந்தரமூர்த்தி சுவாமி
கள் பதிகம்.

**திருக்கலிக்காமூர்**—காவிரி வடகரை
யில் ஒரு சிவ க்ஷேத்திரம். இது
அன்னப்பன்பேட்டையென வழங்
கும். பராசரர் பூசித்தது. சுந்தரேச
சர் அழகுவனமுலையம்மை அம்பு

வி தீர்த்தம், திருஞானசம்பந்தசுவாமிகள் பதிகம்.

**திருக்கவித்தலம்** — காவிரி வடகரையில் ஒரு விஷ்ணு க்ஷேத்திரம். கஜேந்திரனுக்கும் சிறிய திருவடிக்கும் பிரத்தியக்ஷம். கஜேந்திரவரதர் இரமாமணிவல்லி நாச்சியார் ககனாகிருதி விமானம் கஜேந்திர புஷ்கரணி கபிலதீர்த்தம் புஜங்க சயனம். திருமழிசையாழ்வார் மங்களாசாசனம்.

**திருக்கழிப்பாலை**—காவிரிவடகரையிலுள்ள தொரு சிவஸ்தலம். வான்மீகர் பூசித்தது. பால்வண்ணநாதேசர் பொற்பத வேதநாயகி யம்மை வான்மீக தீர்த்தம். கொள்ளிடநதி. மூவர்பதிகமும் பெற்றது.

**திருக்கழுக்குன்றம்**—தொண்டைநாட்டுச் சிவக்ஷேத்திரங்களி லொன்று. பக்ஷிதீர்த்தம் வேதகிரி உருத்திரகோடீசுரம் என்றும் வழங்கும். நான்கு வேதங்களே ஒருமலையுருவாக நின்றதலம். அஷ்டவசுக்கள், திருநந்திதேவர், இந்திரன், திருமால் முதலாயினோர் பூசித்ததலம். பசு, வராகம் முதலியவை பிரதக்ஷணம்செய்து தேவவுருப்பெற்றதலம். திருப்பாற்கடலைக்கடைய மந்தரகிரியைப்பேர்த்தபோது அதிலுண்டாகிய கோடிராட்சதர்களைக் கொன்றகோடிஉருத்திரர்கள்பூசித்துப் பேறடைந்ததலம். கிரேதாயுகத்தில் சண்டன் பிரசண்டனெனும் கழுகரசர்களும், திரேதாயுகத்தில் சம்பாதி சடாயுவென்னும் கழுகரசர்களும், துவாபரயுகத்தில் சம்புகுத்தன்மாகுத்தனெனும் ரிஷிகள் சத்திபெரிது சிவம் பெரிதெனத் தர்க்கித்து, அவ்விருவரும் வந்து கூறியதையும் சம்மதியாமற்பெற்ற சாபவசத்தாற் கழுகுருவுடையோராயிருந்த அக்கழுகுகளும் பூசித்து முத்தியடைந்தன. அதுபோலவே கலியுகத்தில் பூடா விருத்தா என்னுமிரண்டுதலைசிகள் சிவபெருமானருளிய திருவார்த்தையை மறுத்து உடனே முத்திவேண்ட எதிர் மொழிந்த குற்றத்திற்காகக் கழுகுருபம்பெற்றுக் கலியீற்றில் முத்தியடைய வழிபட்டுக்கொண் டிருக்குந்தலம். வேதகிரீச்சுரர், பெண்ணினல்லாளம்மை, சங்குதீர்த்தம், லக்ஷதீர்த்தம் இந்திரதீர்த்தம், பட்சிதீர்த்தம். சமயாசாரியராகிய ஸ்ரீமன் மாணிக்கவாசக சுவாமிகள் குருவடிவந்தொழப் பெற்ற "காட்டினாய் கழுக்குன்றிலே", எனத் திருவாசகம்பாடியருளிய தலம். இத்தலத்தில் மாத்திரம் சமயாசாரியர்களுக்குப் பிரத்தியேகமாகத்திருக்கோயிலிருக்கின்றன. சமயாசாரியர் நால்வர் பதிகங்களும் பெற்றது. இந்திரன் பூசையால் இடியபிஷேகமும், திருமால் பூசையால் சங்கோற்பவமும் 12-வருடங்கட் கொருமுறை யின்றும் நிகழ்கின்றன.

**திருக்கழுமலம்**—சீகாழியின்பன்னிரு திருநாமங்களி லொன்று.

**திருக்களக்காடு**—பாண்டிநாட்டுச்சிவஸ்தலங்களி லொன்று. சுவயம்புவனேசுரர் உமாதேவியம்மை பச்சைநதி சிவகங்கைமுதலிய தீர்த்தங்கள். கற்பினுக்கரசியாயவளவி யம்மை தமது பர்த்தாவைத் தாங்கிக்கொண்டு செல்லும்போது,கழுவிற்குத்துயிராயிருந்த மாண்டவ்ய

ரிஷியார் காலிற்றுக்க, அவர் அவ
னைச் சூரியோதயத்தில் அமங்கலை
யாக வென்றிட்ட சாபம் நோக்கி,
அந்நாரினி நம்மை சூரியோத
யம் ஆகாமற்போகவென்று சபிக்க
சிவபெருமான் அவர்கள் இருவர்
சாபத்தையும் நீக்கியருளியதலம்.
அநுசூயையிற்காண்க.

திருக்கணம்—தொண்டை நாட்டுள்ள
தொரு சிவஸ்தலம். சமயாசாரியர்
இங்கு வந்து பூஜாசாமான்களைக்
கரையில் வைத்து நீராடுகையில்
அவற்றை வேற்றிடம் கொண்டு
சென்று அவர்களுக்குக் காட்டின
மையின் சுவாமி திருக்கள்ளீசரெ
னப்பட்டனர். அம்பாள் காமாக்ஷித்
தாயார் குசஸ்தலநதி.

திருக்களர்—காவிரித்தென் கரையில்
சிவஸ்தலம். பராசர் காணவர் துரு
வாசர்முதலிய முனிவர் பூசித்தது.
துருவாசருக்குத் தரிசனந் தந்த
நடேசமூர்த்தமும் அம்முனிமூர்த்
தமும் அவ்வாலயத்துள. களரிவ
நூளையேச்சுரர் அழகேசவரி திரு
க்குள தீர்த்தம். திருஞான சம்பந்த
சுவாமிகள் பதிகம்.

திருக்களிற்றுப்படியார் — சித்தாந்த
சாத்திரம் பதினான்கனு ளொன்று.
திருக்கடவூர் உய்யவந்த தேவநாய
னார் அருளிச்செய்தது. நூறு திரு
வெண்பாக்களை யுடையது. திரு
வுந்தியார் உட்கருத்துக்களை விரித்
துரைப்பது. அஜவாணிபரா பிருந்
தவராகலின் இதனை யங்கீகரிப்ப
தற்கொரு தெய்வீகம் வேண்டப்
படுமெனக் கூறக்கேட்ட உய்யவந்
ததேவர் திருச்சிற்றம் பலத்துத்
திருக்களிற்றுப் படியில் வைக்க,
அத்திருக்களிறு நிமிர்ந்துவாங்கிச்
சனகசபேசர் திருக்கரத்திற் கொ
டுக்கப்பெற்ற மகிமை வாய்ந்தது.

திருக்களாவூர் — திருக்கருகாவூரின்
நாமாந்தரம்.

திருக்களூர்-திருக்கோளூரிற் காண்க.

திருக்கள்வனூர்—தொண்டைநாட்டு
விஷ்ணுக்ஷேத்திரத்தொன்று. பூமி
யைச் சுருட்டிச்சென்ற இரணி
யனை வதைத்துப் பூமியை மீட்ட
அவசரம். அசுவத்த நாராயணனுக்
குப் பிரத்தியக்ஷம். ஆதிவராகப்பெ
ருமான் அபயநாயகி நாச்சியார் வா
மனவிமானம் நித்தியபுஷ்கரணி -
திருமங்கை யாழ்வார் மங்களாசா
சனம்

திருக்கள்ளம் } தொண்டைநாட்டில்
திருக்கள்ளில் } திரு ஆலங்காட்டின்
தென்கிழக்கில் ஒருசிவக்ஷேத்திரம்.
பிருகுமுனி பூசிக்கத் தக்ஷிணாமூர்
த்தி ஸ்வரூபமாகத் தரிசனந்தந்தரு
ளியது. சிவாநந்தேசர் ஆநந்தவல்லி
திருநந்தி தீர்த்தம் திருஞானசம்பந்
தர்பதிகம்.

திருக்கற்குடிமலை—காவிரித் தென்க
ரையில் ஒருசிவதலம். உய்யக்கொ
ண்டான் பெருமலை என்றும் வழங்
கும். சழநாட்டரச னொருவன் புண்
ணியமிகையாற் சிவபக்தியிற் சிற
ந்து உச்சிக்காலத்திற் பூசித்துத்
துதித்து முத்தியடைந்தது. மூர்த்
திகரர் உச்சிவாத நாயகர் அஞ்ச
னாக்ஷியம்மைமுத்திதீர்த்தம். மூவர்
பதிகமும் பெற்றது.

திருக்கன்றாப்பூர்—காவிரித் தென்க
ரையில் ஒரு சிவதலம். ஒருமங்கை
யின் பொருட்டுக் கன்றுக்குட்டிக்
குகட்ட அப்பினின்று சிவபெரு

மான் காவிரித்தலையின் அவ்வூர் இப்பெயர் பெற்றது. இம்பனெனுமரசன் பூசித்து வரம்பெற்றது. சுந்தரியப்பர் மாதுகாயவியம்மை பிரசன்னதீர்த்தம். திருநாவுக்கரசு சுவாமிகள் பதிகம்.

திருக்காட்கரை—மலைநாட்டி லுள்ள தொரு விஷ்ணுக்ஷேத்திரம். கபில முனிக்குப்பிரத்தியக்ஷம். அப்பன். பெருஞ்செல்வநாயகி புட்கலவிமானம் கபில தீர்த்தம். நம்மாழ்வார் மங்களாசாசனம்.

திருக்காட்டுப்பள்ளி—காவிரி வடகரையிலுள்ள தொரு சிவக்ஷேத்திரம். இந்திரன் பூசித்த க்ஷேத்திரங்களிலொன்று. ஆரணிய சுந்தரேசர் அகிலாண்டநாயகி காவிரிநதி தீர்த்தம் அமுதப்பொய்கை தீர்த்தம். திருஞானசம்பந்தர் பதிகம்.

திருக்காட்டுப்பள்ளி(மேலை)— காவிரித்தென்கரையில் ஒரு சிவக்ஷேத்திரம். உறையூரில் சாரமாமுனிவரது நந்தனவனத்திலிருந்த செவ்வந்திமலரை அரசன் மனைவியர்க் களிப்ப அவர்களில் மூத்தாள் சிவபக்தியால் தன் மனையிலிருந்த சிவபிரானுக்கதனை யணிந்து வந்தமை பற்றி, அக்காரிற் பெய்த மண்மாரியின், அவள் மாத்திரந்தப்பி இத்தலத்தையடைந்து காணவருத்த மாற்று நீவாடியப்பரோ வென, சிவபிரான் அவளுக் கிரங்கி அவ்வெப்பந் தவிர்த்தருளிய தலம். நீயாடியப்பர் வார்கொண்ட முலையம்மை சூரியதீர்த்தம் அக்கினிதீர்த்தம். திருஞானசம்பந்த சுவாமிகளும் திருநாவுக்கரசு சுவாமிகளும் பாடப்பெற்றது.

திருக்காச்சீச்சுரம்—பாண்டி நாட்டில் ஒரு சிவதலம்.

திருக்காம்பீலி—காவிரித் தென்கரையில் ஒரு சிவதலம். கேசாயனுர் முத்தியடைந்த க்ஷேத்திரம்.

திருக்காரகம்—காஞ்சியில் உலகளந்த பெருமாள் கோயிலினுள் ஒருவிஷ்ணுதலம். காசகருஷிக்குப் பிரத்தியக்ஷம், கருணாகரப்பெருமாள் பத்மாமணி நாச்சியார் வாமன விமானம் அக்ராயதீர்த்தம் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

திருக்காராயில்—காவிரித் தென்கரையில் ஒரு சிவதலம். இந்திரன் முசுகுந்தன் முதலியோர் பூசித்தது. சப்தவிடங்கதலத்து ளொன்று. கண்ணாயிரநாதர் கயிலாய நாயகி இந்திரதீர்த்தம். திருஞான சம்பந்தர்பதிகம்.

திருக்கார்வானம்—தொண்டைநாட்டு விஷ்ணுதலத் தொன்று. காஞ்சியில் உலகளந்தபெருமாள் கோயிலினுள் ளிருப்பது. மகாபலிக்கும் அசுவத்தாமாவுக்கும்பிரத்தியக்ஷம். நவநீதசோரன் கமலவல்லி நாச்சியார் புட்கலவிமானம் கௌரிதடாகம். திருமங்கை யாழ்வார் மங்களாசாசனம்.

திருக்காவளம்பாடி—காவிரிவடகரையில் ஒரு விஷ்ணு க்ஷேத்திரம். சேனைமுதலியார் மித்திர தேவர் இவர்கட்குப் பிரத்தியக்ஷம். கோபாலகிருஷ்ணர் மடவரல்மங்கை நாச்சியார் சுயம்புவிமானம் தடமலர்ப் பொய்கை. திருமங்கை யாழ்வார் மங்களாசாசனம்.

திருக்காழிச்சீராமவிண்ணகரம்— காவிரிவடகரையில் ஒரு விஷ்ணு

யாவிருக்கும் பொருட்டு, மகமேரு கிரியின் சிகரத்தில் ஸ்தாபித்தபொழுது, ஒரு பிரமப் பிரளய முண்டாக, அதில் அந்தக் கும்பமெடுபட்டு இந்த க்ஷேத்திரத்தின் ஹேம புட்கரணி தீர்த்தத்தின் மேல்பக்கத்திற்றங்கிவிட, சிவ பெருமான் பிரளய முடிந்த பின்பு, உலகத்தைச் சிருஷ்டிக்கக்கருதி வேடவடிவங்கொண் டெழுந்தருளி, அந்தக்கும்பத்தைப் பாணப்பிரயோகத்தினாற் சேதித்தருள, அதினின்றுஞ் சராசரங்களெல்லா முற்பத்தியானது மல்லாமல் அமுதமும் ஐந்துகுரோசவெல்லை சூழப்பட்டது இதுவே கும்பகோணம். இந்தக் கும்பமுடைந்த இடத்தி லிருந்த அமிர்தங்களைத் திரட்டிச் சிவலிங்கமாக்கி வேடவடிவமாகிய சிவபெருமானே பூசித்தருளிய காரணத்தால் அவ் விலிங்கத்திற்குக் கும்பேஸ்வரரென நாமகரணஞ் சூட்டப் பட்டது ஹேம புஷ்கரணி என்னுஞ் சுவர்ணபுஷ்கரணி தீர்த்தமானது இப்பொழுது மாமகதீர்த்தமென வழங்குகின்றது பன்னிரு வருடத்துக் கொருதடவை சிங்கராசியில் குருவருங்காலமாகிய மாத மகநக்ஷத்திரத்தில் நதிகன்னிகைகள் வருகிறதென் றைதீகம். பாலனமகாமுனிவர் தமது தவாசின் அங்கத்தைக் கொண்டு நல்ல தீர்த்தத்திற் போடக்கருதிப் பல தீர்த்தத்துறை சென்றும், என்பாயேயிருக்க அவ்வங்கம் இத் தீர்த்தத்துறையி லமிழ்த்தப் பதர்க்கப் பொற்றாமரைப் பூவாக மாறியது. இக்காரணத்தினாலும் ஏமரிஷி பூசித்த காரணத்தினாலும் ஹேமபுட்கரணி யென வழங்குகின்றது. திருஞானசம்பந்தசுவாமிகள் திருநாவுக்கரசு சுவாமிகள் இவர்கள் பதிகம் பெற்றன்னது.

திருக்குடவாயில்—காவிரித் தென்கரையில் ஒரு சிவதலம். திருணபிந்து எனுமுனிவர் பூசிப்ப, சிவபெருமான் திருக்குடத்தி னின்றும் பிரசன்னராய் அவரது குட்டரோகமை நீக்கியருளிய தலம். கோணேசுரர் பெரியநாயகியம்மை திருக்குடதீர்த்தம் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் தேவாரம் பெற்றது.

திருக்குரக்குக்கா—காவிரி வடகரையில் ஒரு சிவதலம். அநுமான் பூசித்தது. கொந்தளேசுரர் கொந்தளநாயகி அநுமதீர்த்தம். திருநாவுக்கரசுசுவாமிகள் பதிகம் பெற்றது.

திருக்குரங்கணின்முட்டம்—தொண்டைநாட்டில் வாலி அணில் காகம் பூசித்த சிவ க்ஷேத்திரம். வாலீசர் இறையார்வளையம்மை காலிதீர்த்தம். திருஞான சம்பந்த மூர்த்திசுவாமிகள் பாடல்.

திருக்குருகாவூர்—காவிரிவடகரையில் ஒரு சிவதலம். சித்திரா பௌர்ணமியில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக்கூட்டத்துடன் பசித்துவருவதறிந்து சிவபெருமான் கட்டமுதருந்துவித்து, வேடரூபமாய்ஆலயத்திற் கழைத்துவந்த தலம். திருமேனி வெள்ளடையீசர் காவியங்கண்ணியம்மை வெள்ளடை தீர்த்தம். திருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள் பதிகம் பெற்றது. [மாத்திரம்.

திருக்குருகூர்—நம்மாழ்வாருக்கு அவ

திருக்குருகூர்—பாண்டிநாட்டின் ஒரு விஷ்ணுஸ்தலம். பிரமனுக்கும், அங்கே அவதரித்த நம்மாழ்வாருக்கும், மதுரகவியாழ்வாருக்கும் பிரத்தியக்ஷம். ஆதிநாதப் பெருமாள் ஆதிநாதவல்லி கோவிந்தவிமானம் தாம்பிரபர்ணிநதி பிரம தீர்த்தம். நம்மாழ்வார் மங்களாசாசனம். அவதாரக்ஷேத்திரம். பிரயோக விவேக நூலாசிரியர் ஜனனஸ்தலமிதுவே.

திருக்குருகைப்பிரான்பிள்ளான்-இவர் [illegible]க்கார ஞாதிபதிகள் சிஷ்யர்களுள் தலைவரி லொருவர்.

திருக்குலசேகரன்பட்டணம்—பாண்டிநாட்டில் திருச்செந்தூருக்குத் தென்மேற்கில் ஒரு சிவஸ்தலம். காருணியஜய கதிகொண்டேசர் அறம்வளர்த்தநாயகி காருணி தீர்த்தம் சமுத்திரதீர்த்தம் மாவிருக்ஷம். சூரபன்மன் யுத்தமுடிவில் மாமரமாக நின்ற தலமெனச் சொல்கிறார்கள். இதனை யுறுப்புறங்களில் மாவிருக்ஷமிலாதிருக்கும், இவ்விடத்துள்ள ஒருமாமரமானது எக்காலத்தும் அரும்புமலர்காய்கனிகளோடு விளங்குகிறதாம்.

திருக்குவளை — திருக்கோளிலியிற் {காணக.

திருக்குளந்தை— பாண்டி நாட்டில் ஒரு விஷ்ணுக்ஷேத்திரம். மாயக்கூத்தன் குழந்தைவல்லி நாச்சியார் ஆனந்தநிலய விமானம் பெருங்குள தீர்த்தம். நம்மாழ்வார் மங்களாசாசனம்.

திருக்குறள்—தமிழ்ப்பாஷையி லுள்ள நீதிநூல்களி லெல்லாம் மிகச்சிறந்து பல்வேறு சமயத்தினர்க்கும் மாறுபாடின்றி அங்கீகரிக்க இடனாயுள்ள அரிய பெரிய தொருநூல். இது சங்கமரீஇய பதினெண்கீழ்க்கணக்கினுளொன்று. தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனாரால் இயற்றப்பட்டது. அறம்பொருளின்பமென்னு முப்பால்களையும் விரித்துக் கூறுவது. இதனால் இது முப்பாலெனவும் பெயர்பெறும். ஒவ்வொருவிடயத்தை யெடுத்துக்கூறும் பப்பத்துக் குறள்வெண்பாக்களைத் தனித்தனியே யுடைய 133 அதிகார வகுப்புக்களையுடையது, சங்கப்புலவர்களாலேகூறப்பட்ட திருவள்ளுவமாலை இதன் பெருமையை நன்குவிளக்கும். இத்திருக்குறட்கு "தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர், பரிதி பரிமேலழகர்—திருமலையர், மல்லர் கவிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவர்நூற்கு, எல்லையுரை செய்தா ரிவர்." பதின்மருரையிலும் பரிமேலழகருரையே சிறந்து வழங்கும்.

திருக்குறிப்புத் தொண்டநாயனார் — அறுபான்மும்மை நாயன்மார்களி லொருவர். தொண்டைநாட்டில் காஞ்சிமாநகரில் ஏகாலியர் குலத்திற் றோன்றிச் சிவனடியார்கள் குறிப்பறிந்து அவர்கள் வஸ்திரங்களை மாசகற்றிக் கொடுத்தலாலேயே திருக்குறிப்புத் தொண்டர் என்னும் பெயரையுடையவராயினார். இவரது பத்தியைச் சோதிக்கத் திருவுளங்கொண்ட சிவபெருமான் ஏழையராய் அழுக்குக்கந்தை தரித்த ஓர்சிவனடியார்போல்முன் வந்தருள; நாயனார் அவரை எதிர்சென்று வணங்கிச் சுவாமி தங்கள் ஆடையைத் தந்தால் அந்திகோளைக்குமுன் மாசகற்றித் தருகிறேனெ

தேகரோகத்தினால் பாண்டி நாட்டிற் சஞ்சரித்துப் பிச்சையேற்றுழலும்போது, இத்தலச் சிவாலய திரிகூடாசலத்தினின்று, மந்தமாருதம் தேகத்திற்பட்ட புண்ணியவசத்தால், இயமதூதர்களிடத்தினின்று மீட்டுச் சிவலோகத்தில் வைத்ததலம்.

தக்கன்வேள்வியிலிருந்த சிவதுரோகிகளான தேவர்கள்பூசிப்ப, அவர்களது சிவத்துரோகத்தை நீக்கியருளியதலம்.

வேடன் வேட்டதிலோர் நரியைத் தொடர்ந்து வந்து அதன் பொருட்டு வலப்பிரதக்ஷணம் வந்த புண்ணியவசத்தால் சிவலோகத்தில்வைத்தருளிய தலம்.

மதயானை நீர்விடாயின் பொருட்டு வடவருவியிற் றிளைத்து வனங்களையலைந்து, அருவிநீரைத் துதிக்கையால் முகந்துசிதற அத்தொழில்களையே பூசனையாகக் கொண்டு அநுக்கிரகித்தருளிய தலம்.

ஓர்வேடன் பன்றியைத் துரத்த, அது சித்திராநதிமடுவில் விழ, அதனோடு குதித்த அவ்வேடனை யங்கிருந்த முதலைபற்றி வயிறறைக் கிழிப்ப, அக்காலம் மாசி மாதமாயிருந்ததுபற்றி யவ்வேடனை நதியின் றெப்பாற் கதியில் விடுத்தருளியதலம்.

பாவத்தினால் நாகத்திற் கிடந்து, வேதனையுற்றதன்றந்தைக்கு, மாசிமாதத் துவாதசியின் பலனைத் தத்தஞ்செய்து கரையேற்றியதலம்.

கண்டகசேதகனென்னு முதுர்ந்த வணிகன், திருவிழாவிற் கடைவைத்து விற்றுவசித்த புண்ணியத்தாலும், புட்பகத்தனென்பவன் பாவத்தின் பொருட்டு, யமதூதர்கையில் யாப்புண்டு, அவர்கள் இத்தலமார்க்கமாய்ச் செல்லா தொழியவேண்டுமென்று பேசிய வார்த்தையைக்கேட்டு இத்தலத்தின் பெயரைச் சொன்னமையாலும், சிவகதியடைந்த தலம்.

அகத்தியமுனிவர், பொதிகைக் கெழுந்தருளும் பொழுது, இத்தலம் வைணவத்தலமாயிருந்த தனாலது, இதன்வழியேசெல்ல, இங்கிருந்த வைணவர்கள், அகத்தியர்தரித்திருந்த சிவசின்னங்களைக் கண்டு பொறாராகி வெளியேதுரத்த, அகத்தியரிஷி, புறம்போய் அவ்வைணவர்களைப்போல வடிவுதாங்கிச் சென்று, அவர்களனுமதிப்படி யாலயத்துட் பிரவேசித்து, விஷ்ணுமூர்த்தியைத் தமது திருக்கரத்தால குழைவித்துச் சிவலிங்கப்பெருமானாகச் செய்து பூசித்து, அவ்வைணவர்களகந்தை நீக்கியருளிய தலம். திருஞானசம்பந்தசுவாமிகளாற் பதிகம்பெற்றுள்ளது. குறும்பலாவுக்கும் ஓர் திருப்பதிக முள்ளது.

திருக்கூடலூர்—காவிரி வடகரையில் விஷ்ணு க்ஷேத்திரம். வையங்காத்தபெருமான் பத்மாசனநாச்சியார் சுத்தசத்துவ விமானம் சக்கரதீர்த்தம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

திருக்கூடலையாற்றூர்—மழநாட்டுச் சிவ க்ஷேத்திரங்களி லொன்று. வடமேற்கி லிருந்து மணிமுத்தாநதியுந் தென்மேற்கிலிருந்து வெள்ளாநதியுஞ் [illegible]

இதற்குக் கூடலையாற்றூ ரென்று பெயர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருமுதுகுன்றத்திற்குச் செல்லுகையில், சிவபெருமான் ஒருவேதியராய்த் தோன்றி, இது கூடலையாற்றூர் மார்க்கமாய் விருத்தாசலத்திற்கு மார்க்கமென்று வழிமறித்தழைத்தது அவர் பதிகம் பெற்றது. நெறிகாட்டு நாயகேசுரர் புரிகுழலாயகிகை யம்மை சங்குதீர்த்தம மணிமுத்தாநதி தீர்த்தம்.

திருக்கூடல்—பாண்டி நாட்டி லுள்ளது. (1) ஒருசிவஸ்தலம். மதுரையிற்காண்க. (2) ஒருவிஷ்ணு ஸ்தலம். தென்மதுரை. கூடலழகர்மரகதவல்லி அஷ்டாங்கவிமானம்ஹேம புஷ்கரணி சக்ரதீர்த்தம திருமழிசையாழ்வார் பெரியாழ்வார் திருமங்கையாழ்வார் ஆண்டாள மங்களாசாசனம

திருக்கேதாரம—வடநாட்டுச் சிவதலங்களிலொன்று. கன்னியமாசத்தமாவாசைமுதல் மீனமாசத் தமாவாசை வரையில் ஆறுமாதம தேவர்களாலும், மற்றைய ஆறு மாதம் மாநுடராலும் பூசிக்கப் படுவது. திருக்கேதாரேச்சுரர் கேதாரகௌரியம்மை (வெகுசீதளமானது) காரகுண்டதீர்த்தம். திருஞானசம்பந்தசுவாமிகள் சுந்தரமூர்த்திசுவாமிகள் பதிகமோதப் பெற்றது.

திருக்கேதீச்சரம்—ஈழநாட்டிலுள்ளதொரு சிவஸ்தலம். பிருகுமுதலிய ருஷிகள் பூசித்தது. மாவியவானென்னுமசுரன் பூசித்து முத்தியடைந்தது. கேதீச்சுரர் கௌரியம்பிகை குளிர்பூஞ் சோலை தீர்த்தம். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளும் சுந்தரமூர்த்தி சுவாமிகளும் பதிகமோதப்பெற்றது.

திருக்கைச்சினம்—காவிரித் தென்கரையில் ஒரு சிவதலம். இரணிக்கமுனிவர் பூசித்தது கைச்சினேசுரர் வெள்ளையம்மை. திருக்குளதீர்த்தம். திருஞானசம்பந்தர் பதிகம்.

திருக்கைலாசஞானவுலா — பதினொராம் திருமுறைப் பிரபந்தங்களிலொன்று. இது சேரமான் பெருமானாயனாரால் அருளிச் செய்யப்பட்டது.

திருக்கைலாசபுரம்—பாண்டி நாட்டிலொரு சிவ தலம். பரத்துவாசமுதலிய முனிவர் பூசித்துக் கைலாயதரிசனங் காணப்பெற்றதலம். திருக்கைலாயநாதர் சிவகாமியம்மை தாமிரபர்ணிநதிதீர்த்தம். இது சிந்துபூந்துறை யென்று வழங்கும்.

திருக்கைலாயபுரம்—பாண்டி நாட்டிலொரு சிவக்ஷேத்திரம. அகத்தியர் பூசித்துச் சிவபெருமானது திருமணக்கோல தரிசனம் பெற்றதலம். திருக்கைலையி னின்றும் தந்தையின் எலும்பைக் காசிக்குக்கொண்டு போந்து எடுப்பித்துவந்த ஒருவேதியன், காசியில் அவ்வென்பு எலும்பாயிருந்ததையும், இத்தலத்தில் மலராயிருந்ததையும் கண்டுணர்ந்து மீண்டேயிங்குவந்து ஈமக்கடன் முடித்துத் திருவருள் பெற்றது. கைலாயநாதர் சிவகாமியம்மை. தாமிரபர்ணிநதி. (ஸ்ரீவைகுண்டம்.)

திருக்கைவழக்கம்—கம்பரால் வேளாளர் பெருமையை விளக்கச்செய்யப்பட்ட தொருநூல். இத்தகை

யருமே ஏசெழுபதும்.

திருக்கொடிமாடச் செங்குன்றூர் — திருச்செங்குன்றூரிற் காண்க.

திருக்கொடுங்குன்றம்—பாண்டிநாட்டுச்சிவதலங்களி லொன்று. இது பிரான்மலை யென்றும் வழங்கும். கார்த்திகையில் பர்வத உச்சியில் தீபதரிசனம். கொடுங்குன் றேசர் குயிலமுதநாயகி சிவகங்கை தீர்த்தம். பேர்மதிக்காமல் தீர்க்கும் விருக்ஷம். மங்கைநாயகர் மருவரங்க கோவலன்கொண்ட தலம். திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் பதிகம்.

திருக்கொடும்பாளூர்—காவிரித்தென் கரையில் ஒரு சிவதலம். இடங்கழி நாயனார் அவதார க்ஷேத்திரம்.

திருக்கொட்டையூர் கோடீச்சரம் } மார்க்கண்டேயர் முதலியோர் பூசித்த சிவதலம் காவிரிவடகரையிலுள்ளது. கோடீச்சுரர் பந்தாடு நாயகியம்மை சிவகங்கை தீர்த்தம் திருநாவுக்கரசு சுவாமிகள் பதிகம் பெற்றது. இத்தலத்திற்கே கோடீச்சரக்கோவை செய்யப்பட்டது.

திருக்கொண்டீச்சரம் — காமதேனு பூசித்துப் பலபண்டங்களையும் பலர்க்கும் பரோபகாரமாய்க் கொடுத்துவர வரம்பெற்ற சிவதலம். காவிரித்தென்கரையி லுள்ளது. பசுபதீசர் சாந்தநாயகி பசுதீர்த்தம். திருநாவுக்கரசு சுவாமிகள் பாடல்.

திருக்கொள்ளம்பூதூர்—காவிரித் தென்கரையிலுள்ள தொரு சிவதலம். வில்வவன நாதேசர் சௌந்தரநாயகியம்மை குடமுருட்டி நதிதீர்த்தம் வில்வவிருக்ஷம். காவிரிநதியிற் பெருவெள்ளம் வருகையில், திருஞானசம்பந்தசுவாமிகள் திருக்கூட்டத்தோடும் ஓடமேறிநின்று "கொட்டமே கமழும் கொள்ளம் பூதூர்" என்னும் முதலையுடைய திருப்பதிக மோதி அரனருளேயே ஓடத்தை அக்கரையிற் செலுத்தியருளிய க்ஷேத்திரம்.

திருக்கொள்ளிக்காடு—காவிரித் தென்கரையில் ஒரு சிவதலம். அக்கினீசுரர் பஞ்சினுமெல் லடியம்மை திருக்கொள்ளிடநதிதீர்த்தம். திருஞானசம்பந்த சுவாமிகள் பதிகம்.

திருக்கோகரணம்—துளுவ நாட்டில் விளங்கும் பிரசித்திபெற்ற சிவதலம். மகாபல லிங்கநாதர் பெரியநாயகியம்மை சிவகங்கை முதலிய தீர்த்தங்கள். இராவணன்திருக்கைலாயத்திற் சிவபிரான்பால் தமது இலங்கை யழியாதிருக்கும் பொருட்டுத் தாபிக்கப் பூசிக்கச் சிவலிங்கமொன்று பெறறச் செல்வதை யுணர்ந்த தேவர்கள், விநாயக மூர்த்தியிடத்து முறையிட, அவர் பிரமசாரி வடிவத்துடன் இராவணன் முன்னேதோன்றி, அவனுக்குச் சிறுநீர்சுரக்கும்படி செய்தருள, கீழே வைக்க வொண்ணுதென்று பெற்ற அச்சிவலிங்கத்தை யப்பிரமசாரி கையிற்கொடுத்து ஜலவிசர்ச்சனத்துக்குச் சென்ற இராவணன் வருமுன் சிவலிங்கத்தைக் கீழேவைத்துவிட, அவ் விலிங்கத்தை இராவண னிருபது கரங்களாலும் பற்றி யெழுப்பவும் வாராது, பசுவின் காதுபோற் குழைந்தமை நோக்கி இராவணனால் மகாபல ஈஸ்வரரென்று பெயரிட்டுப் பூசித்து வணங்கிய சிவதலம். பசுவின் காதுபோற் குழைந்த காரணத்தாற் கோகரண

மெனப்படும். திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகள் பதிகம் பெற்றுள்ளது.

திருக்கோடிக்கா—காவிரி வடகரையில் ஒரு சிவதலம். கோடிகாவேச்சுரர் வடிவாம்பிகையம்மை காவிரிநதிதீர்த்தம். திருஞான சம்பந்த சுவாமிகள் திருநாவுக்கரசு சுவாமிகளாகிய இவர் பதிகமும் ஐயடிகள் காடவர்கோன் க்ஷேத்திர வெண்பாவும் ஓதப்பெற்றது.

திருக்கோடிக்குழகர்—காவிரித் தென்கரையில் ஒரு சிவதலம். வாயுதேவன் இன்னும் பூசிப்பதாகக் கூடிய காற்றெழும்புக்தலம். அமிர்தகடேசர் மையார் தடங்கண்ணி அமிர்த தீர்த்தம் அலைவாய்த் தீர்த்தம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் பதிகம்.

திருக்கோட்டாறு—காவிரித் தென்கரையில் ஒரு சிவதலம். ஐராவதேசர் வண்டமர் பூங்குழலம்மை சூரியதீர்த்தம் ஐராவததீர்த்தம். திருஞானசம்பந்தமூர்த்தி ஸ்வாமிகள் பதிகம்பெற்றது.

திருக்கோட்டியூர்— பாண்டி நாட்டு விஷ்ணு ஸ்தலங்களி லொன்று. கிழக்குமுகமாக நின்றும் இருந்தும் நடந்தும் கிடந்தும் கூத்தாடியதலம். சௌமியநாராயணர்சௌந்தர்ய நாயகித் தாயார் அஷ்டாங்க விமானம் தேவபுஷ்கரணி - பூதத்தாழ்வார் பேயாழ்வார் திருமழிசையாழ்வார் பெரியாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

திருக்கோட்டிச்சுரம்—பாண்டி நாட்டின் ஒரு சிவ தலம். அகஸ்தியமுனிவராலமைத்த இலிங்கம் நிலையாமையின் "இஃதென்ன கோட்டிசசனே" எனக் கூறியபின் அமைவுபெற்று அம்முனிவர் விரற்றழும்பேனும் உருவாக்கப் பெற்றதுபற்றி இப்பெயர் பெற்றது. கோட்டீச்சுரர் கொடியிடையாளம்மை தாமிரபர்ணிநதி திருவலஞ்சுழிதீர்த்தம்.

திருக்கோட்டூர்—காவிரித்தென்கரையிலுள்ள தொரு சிவஸ்தலம். தேவர்களும் குச்சர ருஷியும் பூசித்தது. கொழுந்தேச்சுரர் மதுரவசனியம்மை அமுததீர்த்தம். திருஞானசம்பந்தசுவாமிகள் தேவாரம்.

திருக்கோணமலை— இது ஈழநாட்டிலுள்ள சிவ தலங்களி லொன்று. திருக்கணமலை திருக்கோணமலை யென்றும் வழங்கும். சத்தி போதாயனர் முதலிய ருஷிகளும் தேவாசுரர்களும் பூசித்த தலம். இது கைலாய கிரியின் கொடுமுடிகளி லொன்றும். திருஞான சம்பந்த மூர்த்திசுவாமிகள் தேவாரம் பெற்றது. திருக்கோணேச்சுரர் மாதுமையாளம்மை பிகாசுவை தீர்த்தம்.

திருக்கோயில்— திருப்புலியூர் சிதம்பரம் பூலோககைலாயம் ஆகாயலிங்க ஸ்தலம் முதலிய எண்ணில்லாத் திருநாமங்க ளுடன் காவிரி வடகரையில் விளங்கும் மகாப்பிரசித்திபெற்ற சிவஸ்தலம். தில்லைவனக்ஷேத்திரம், கனகசபை, மத்தியந்தன முனிவர் குமாராகிய பாலமுனிவர் தில்லை வனத்திற் பத்திமிகுதியால் மலர்கொய்தற்கு, பொழுதுவிடிந்தால் வண்டாதும், இருட்டானுற் கண் தெரியாமை யானும், இடையூறு படுவதறிந்து சிவனுக் கிரகத்தாற் புலிக் கண்ணும், புலிக்காலும் பெற்று வியாக்கிரபாத

ரெனும் பெயரோடு தவஞ்செய்திருந்தனர். தாருகாவனத்து நடனத்தை விஷ்ணு தேவரா லுணர்ந்த ஆதிசேடர், அத்திரி முனிவர்பாற் பதஞ்சலியாரா யவதாரஞ் செய்திருந்தனர். சிவகாம வல்லித் தாயார் வாமபாகத்தில் நின்று திருநோக்குற்று மகிழவும், பிரமன் விஷ்ணு இந்திரன் ஆதியாகிய தேவர்களும், பதஞ்சலி வியாக்ரபாதர் முதலிய இருடிகளும் கண்டு பேரானந்த மடைந்துய்யவும், குருவாரத்தோடு கூடிய தைப்பூசத்தன்று சிவபெருமான் பஞ்சகிருத்திய ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளிய தலம். சமஸ்த தலங்களி லுள்ள சிவகலைகளனைத்தும் அர்த்தயாமத்தில் வந்தொடுங்கப் பின் செல்லா நிற்குந் தலம்.

நன்மதன், நச்சகன் நற்றெரிசனன் முதலிய அநேகர் முத்திபெற்றதலம். ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்குச் சிவ தீட்சை செய்தருளியவரும், வியாக்கிரபாதமகா ரிஷியின் புத்திரருமாகிய உபமன்னியு மகா ரிஷிக்குத் திருப்பாற் கடல் அருளியதலம். திருத்தொண்டத் தொகைக்கு முதலெடுத்துக் கொடுத்த புத்திடங்கொண்டார், தில்லைவாழந்தணர்களென் றுசிறப்பித்தருளிய திருவுடை யந்தணர்கள் மூவாயிரவர் பூசிக்குந் தலம். வியாசமுனிவர், சுகமுனிவர், சௌனக முனிவர், சூதமுனிவர் முதலியோர்பூசித்து அருள் பெற்றதலம். சைமினி முனிவர் மூன்றடி, தம்கவியாயும், சற்றடி வேதமாயுமுள்ள வேதபாதஸ்தவத்தால் தோத்தரித்த தலம்.

திருவெண் காடரெனும் பட்டினத்துப் பிள்ளையாரது சம்பிரதியாயிருந்த சேந்தனார் நியமம் பூண்டு மனைவி மக்களின் வேண்டுகோளாற் பட்டினத்துச் சுவாமிகள் திருவாக்குப்படி சிறை நீங்கிய பின்னர், மனைவி மக்களுடன் இத்தலம் புக்கு, விறகு விற்று வரும் வருவாய்த் தால் ஒருசிவனடியாருக்குப் பசிர்த்தூட்டி யுண்ணும் நியமம் பூண்டொழுகத் தில்லை வாணர் அவர்பால் கன்னிருளிற் குறுகிக் கூழுண்டு, அக்கூழைத் தம் திருமேனி மேல், மறுநாள் ஆலயத்திற்காட்டி, மூலையி லிருந்த அச்சேந்தனாரை முற்றத்தே விட்டு, அவரால் நிகழ்ந்த அற்புதத்தை ஐயுற்ற அடியார்களுக்காக, அவர் பாடியருளியதிருப்பல்லாண்டின் வழித்தாய், இரதம் - தானே நடத்துவரக் கொண்டருளும்படி அநுக்கிரகித்த தலம்.

மாணிக்கவாசக சுவாமிகள் திருப்பெருந்துறையில் இத்தலத்திற்கு வரும்படி கட்டளை யிட்டருளியபடி இத்தலமடைந்து, "கண்டபத்து", "கோயின்மூத்த திருப்பதிகம்" முதலியவை திருவாய்மலர்ந்து, பின்னர், நிஷ்டாபரரா யெழுந்தருளியிருப்ப, யாழ்ப்பாணத்துப் புத்தர், இத்தலத்தோரை வாதில் வெல்ல வந்தமை யுணர்ந்து நிஷ்டை நீங்கி யெழுந்து, அவர்களை வாதில்வென்றருளி, ஊமைப்பெண்ணைப் பேசுவித்து, அவள் கூற்றாகத் "திருச்சாழல்" பாடி யருளிச், சிவபெருமான் பிராமணவடிவங் கொண்டு வந்து கேட்பத்தாம் பாடி யருளிய "திருவாசகத்தை

யும், திருக்கோவலையும்'' அவரது திருக்காத்தா லெழுதுவித்தருளி, ஆனிமாத மகநாளில் சிவபிரானோடு இரண்டறக்கலந்ததலம்.

திருநீலகண்ட நாயனார் வேட்கோவர்குலத்தில் சிதம்பர மாநக் கிருத்திகைநாளி லவதரித்தார்திருநீலகண்ட மென்னும் ஆணைவலியால் தம்மனைவியுடன்சயனித்தும் அவரைத் தீண்டாராய், முதுமைப் பருவமளவுஞ் சென்ற வைராக்கியம் வெளிப்படுத்தும் கருத்துடையசிவ பெருமான், ஓர் ஓட்டைக் கொடுத்து அதனைக் காத்தருளி, அதன்பொருட்டு, அவ் விருவோரையும், பாலதீர்த்தத்தில் மூழ்கிச் சத்தியம் புரிவித்து, இளமை நல்கித் தைமாத வைசாகநாளில் முத்தியருளிய தலம்.

இத்திருப்பதி, சபாநாயகர் கோயிலுக்கு மேற்கில் இளமை யாக்கினார் என்னும் பரம சிவனுக்கும் பாலசுந்தராம்பாள் என்னும் பார்வதி தேவியாருக்கும் வாசயோக்கியமான இளமையாக்கினார் கோயிலென வழங்கும் திருப்புலீச்சரமாகும், இது வியாக்கிரபாத முனிவரால் பூசிக்கப்பட்டது. இதற்குமேற்கில் பதஞ்சலிமுனிவரால் பூசிக்கப்பட்ட அனந்தேச்சரர் சவுந்தரநாயகியம்மை வசிக்குங் கோயிலிருக்கின்றது. இச்சன்னிதிக் கெதிரில் அனந்ததீர்த்தமும், பின்புறத்தில் நாகசேரி தீர்த்தமு மிருக்கின்றன. இதற்குவடக்கில் திருக்களாஞ் சேரியில் பிரமதேவன் பூசித்த பிரமபுரீச்சரமும், திருக்காமவல்லி யம்மையான [illegible] பிரமதீர்த்தமு மிருக்கின்றன. மேற் சொல்லிய திருப்பதிகள்சிதம்பரத்திலுள்ளன.

திரு ஆதனூரிற் புலையர்குலத்திலவதரித்த திருநாளைப்போவார்நாயனார் சிவனடியாருக்குத் தோற்கருவிக்கான வார்முதலியனவும், அபிஷேகத்திற்கான கோரோசனை யாதியனவுங் கொடுத்து இத்தலத் தரிசிக்கும் விருப்புடையவராய், நாளைப்போவேன, நாளைப் போவேனென்று சொல்லிக்கொண் டிருந்த காரணத்தால், அப்பேர் தாங்கிச் சிவாநுக்கிரகத்தா லித்தலத்தரிசனைப்பெற்று, அக்கினியிற்குளித்து முனிவராய்ப் புரட்டாசிமாத உரோகிணி நாளில் முத்தி பெற்ற தலம்.

களந்தைநகரில், மன்னவர் மரபிலவதரித்து,சிவனடியார் களுக்குத் திருத்தொண்டு பூண் டொழுகிச் சிவபெருமானது திருவடியையே முடியாகச் சூட்டப்பெற்று, நாடாண்ட கூற்றுவ நாயனார் ஆடிமாதத் திருவாதிரைநாளில் முத்திபெற்ற தலம்.

மன்னவர் மரபிற்சோழராசனது மனைவி கமலவதியார் திருவயிற்றிற் திருவவதாரமாய கோச்செங்கட்சோழ நாயனார் அநேக ஆலயங்கட்டுவித்தும், சிவ பணிவிடை செய்தும்வந்து, மாசிமாத சதையநாளில் முத்திபெற்ற தலம் இந்நாயனார் முன்ஜனனத்தில்திருவானைக்காவில் யானையாயிருந்து பூசித்து சிப்பதமடைந்தவர்.

கணம்புல்லநாயனார் திரு இருக்குவேளூரில்பங்குனிமாதச்சதையத்தில், குறுநிலமன்னவர் மரபி

லவதரித்து, புல்லறுத்துவிற்றவரு
ம்ளதியவர்தால், திரு விளக்குப்
பணிசெய்தொழுகும் நாளில; ஓர்
நாள் அப்புல் விலைப்படாதொழிய
அதனையே திருமுன்னர்விளக்காக
வெரித்தும், எஞ்சிய காலத்திற்குத்
தம் சிகையையே விரகாக வெரி
த்து, கார்த்திகைமாதக்கிருத்திகை
நாளில, முத்திபெற்ற தலம்.

சமயாசாரியர்களுக்குத் தனித்த
னியே திருநடன தரிசனங் காட்
டருளியதும் அல்லாமல்
திருஞானசம்பந்த மூர்த்தி சுவா
மிகளுக்கு, தில்லைவா ழந்தணர்க
ளைச் சிவகணங்களாகக் காட்டியரு
ளியதலம்.

ஐயடிகள் காடவர்கோன "க்ஷே
த்திர வெண்பா" வருளிய தலம்.

திருமாளிகைத் தேவர், கருவூர்
த்தேவர், பூந்துருத்தி நம்பி, காடவ
நம்பி, கண்டராதித்தர், வேணாட்
டடிகள், திருவாலியமுதனார், புரு
டோத்தமநம்பி, சேதிராயர், இவர்
களால் "திருவிசைப்பாவும்" சேந்
தனாரால 'திருப்பல்லாண்டும்' பா
டியருளப்பெற்றதலம்.

சந்தானசாரியர்களில், மறைஞா
னசம்பந்த சிவாசாரியார் பெண்ணா
டகத்திலே பிராமண குலத்திலே
திருவவதாரஞ் செய்தருளி, இத்த
லத்திற்கடுத்த திருக்களாஞ்சேரியி
லெழுந்தருளி யிருந்து, உமாபதி
சிவாசாரியாருக்குச் சிவ தீட்சை
செய்தருளி, ஆவணிமாத உத்திர
நாளில் முத்திபெற்ற தலம்.

தில்லைவா ழந்தணர்களுள் ஒரு
வராகிய உமாபதி சிவாசாரியார்
இத்தலத்திற் கடுத்த கொற்றவன்
குடியிலே யெழுந்தருளி யிருந்து,
சிவப் பிரகாசம், திருவருட்பயன்,
வினாவெண்பா, போற்றிப் பஃறொ
டை, கொடிக் கவி, நெஞ்சுவிடு
தூது, உண்மை நெறி விளக்கம்,
சங்கற்ப நிராகரணம், என்னுஞ்சித்
தாந்த சாஸ்திரங்களைச் செய்தரு
ளித் திருத்தொண்டர் புராணசா
ரம், திருமுறைகண்ட புராணம்,
சேக்கிழார்புராணம், திருப்பதிகக்
கோவை யென்னும் பிரபந்தங்க
ளுஞ் செய்தருளினார் இவர் இத்
தல மான்மியத்தை, வடமொழியி
னின்று மொழிபெயர்த்துக் கோயி
ற்புராணமென்று பாடி முடித்துப்
பெட்டகத்தில் வைத்திருந்த பொ
ழுது, நடேசர், தில்லைவாழந்தணர்
களுக்குக் கனவிற்றோன்றி, நாம்
உமாபதியினது பெட்டகத்துள்ளி
ருக்கின்றோ மெனறு அம்மான்மிய
த்தைக் கேட்பித் தருளிய தலம்.
அன்றியும், அவ்வுமாபதி சிவாசா
ரியசுவாமிகள், சிவ பெருமானால்
அனுப்பப் பட்ட திருமுகத்தைப்
பெற்றுப் பெத்தான் சாம்பனைமுத்
தியிற் சேர்த்தருளிய பொழுது
அவன் மனைவியும் அரசனுங்காண
முள்ளிச்செடிக்கு முத்திகொடுத்த
ருளி, சித்திரைமாத அத்த நாளில்
சிவமாம் பெரும்பேறுபெற்றதலம்

சித்தாந்த சாத்திரங்களிலொன்
றாகிய "திருக்களிற்றுப் படியார்"
என்னுஞ் சாத்திரத்தை திருக்கட
வூர் உய்யவந்த தேவநாயனார் திரு
வாய் மலர்ந்தருளிய, திருக்களிற்
றையுடைய பஞ்சாட்சரப் படியி
ன்மீது வைக்க, அதுவே சிவபெரு
மானடி சேர்பவர்களுக்குக்[illegible]

ட்டியென்பதுபோல, அதனை அப்படியிலிருக்கவிறு, வைதிமிக்கெடுத்து நடேசரதிருவடியில் வைத்தருளியதலம்.

சபாநாயகர், சிவகாமியம்மை, திருமூலநாயகர், உமையம்மை, திருப்புலீச்சர தீர்த்தம், குய்ய தீர்த்தம், புலிமடு, வியாக்கிரபாதம், அநந்தம், பிரமம், நாகசேரி, சிவப்பிரியை, திருப்பாற்கடல், பரமானந்தகூபம் என்னும் பத்து தீர்த்தங்களுள்ளன.

இன்னமிதன் பெருமையைக் குறிக்கில் விரியுமாதலால் விரிவஞ்சிவிடுத்தனம். சமயாசாரியர் நால்வராலும் திருப்பதிகம் பெற்றுள்ளது. இங்கே அருச்சகராகவுள்ளோர் தில்லைமூவாயிரர் அவருள் சிவபெருமானும் ஒருவரெனப் படுவர். இத்தலத்திருப்பணி பிரமமுதற் பிருதிவி யீருனதத்துவங்களை யெல்லாம் குறிப்பிக்கும்படி யமைந்துள்ளது.

**திருக்கோலக்கா**—காவிரி வடகரையிலுள்ளதொரு சிவதலம். பலமுனிவர்கள் பூசித்தது. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் கையாற்றாளொத்தறுத்துப் பாடுதலைச் சிவபெருமான் பொற்றாளங்கொடுக்க, தேவியார் அதற்கு ஓசையருளியது. அவராலும் சுந்தரமூர்த்தி சுவாமிகளாலும் பாடப்பெற்றது. சப்தபுரீசர் ஓசைகொடுத்தநாயகியம்மை. சூரிய தீர்த்தம். ஆனந்த தீர்த்தம்.

**திருக்கோவலூரான்**—[illegible] [illegible] ஔவையின் [illegible].

**திருக்கோவலூர்**—(1) மகதநாட்டுச் சிவதலங்களி லொன்றும் அஷ்டவீரட்டத்து ளொன்றுமாம். அந்தகாசுரசங்காரஞ் செய்தவிடம். அறுபான்மும்மை நாயன்மாரி லொருவராகிய மெய்ப்பொருணாயனார் முத்திபெற்ற தலம். வீரட்டானேசர் சிவானந்த வல்லியம்மை பெண்ணைநதி தீர்த்தம். திருஞானசம்பந்தசுவாமிகள் திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம் பெற்றது. (2) இதுவே விஷ்ணுக்ஷேத்திரமுமாம். பசீச சக்கிரவர்த்தி முதலினோர்க்குப் பிரத்தியக்ஷம் தெரிசனமாயினார். பூங்கோயில் நாச்சியார் பூங்கோவல்லித்தாயார் ஸ்ரீதரவிமானம் ஸ்ரீதரபுஷ்கரிணி. கிழக்கே திருமுகமண்டலம். நின்றதிருக்கோலம். பொய்கையாழ்வார் பேயாழ்வார் பூதத்தாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

**திருக்கோவையாருண்மை**—மணிவாசகபெருமான் திருவாய்மலர்ந்தருளிய திருக்கோவையார்ப் பிரபந்தத்தின் உண்மைஞானப் பொருளைத் திருவாரூர்ச் சுந்தரதேசிகர் எழுதிய தொரு நூல்.

**திருக்கோவையார்**—சைவசமயாசாரிகளில் ஒருவரான ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகள் அருளிச் செய்தது. நானூறு கட்டளைக் கலித்துறைகளையுடையது. அகப்பொருட்பகுதிகளைப் பொருளாக வுடையது. வேறுபொருளுண்டென்றும் அது திருக்கோவையாருண்மை யெனபதில் விளக்கப் பட்டது போன்ற ஞானப்பொருளை யுடைய தென்றும் பெரியோர் கூறுவர். இதற்குச்

சிறந்தவொரு பழைய வுரையுண்டு அது பேராசிரியருரை யென்றும் நச்சினார்க்கினியருரை யென்றும் துணிந்து சொல்ல இடமில்லையெனமுதியோர் கூறுகின்றனர். கடவுட் பத்தியிலழுந்திய ஞானிகள் ஆன்மாவையும் பதியையும் நாயகி நாயகபாவனையாகக் கொண்டு கவி செய்தல் வழக்கு. அங்ஙனமே மாணிக்க வாசகப் பெருமானும் கோவையார் செய்தனர். இந்நூல் சிவபெருமானே அந்தணவடிவுடன் வந்து அருமைத் திருக்கரத்தா லெழுதப்பெற்றது. திருச்சிற்றம்பலக் கோவையாரென்றும்பெயருறும் இது திருவாசகத்துடன் சேர்ந்து எட்டாந் திருமுறையாக விளங்கும்.

திருக்கோழம்பம்—சந்தனெனும் வித்தியாதரன் இந்திரசாபத்தா லுற்ற பசுவின் வடிவைத் தவம்புரிந்தொழித்த சிவதலம். கோகிலேசர் சௌந்தரநாயகி மதுதீர்த்தம் கோகிலதீர்த்தம். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் பெற்றது. காவிரித் தென்கரையி லுள்ளது.

திருக்கோளிலி—திருக்குவளை யென்றும்வழங்கும். காவிரித் தென்கரையிலுள்ளது, சப்தவிடங்கத் தலத்தொன்று. அவனிவிடங்கத்தியாகர் வண்டு நடனம். பிரமராதி முசுகுந்தர் முதலியோர் பூசித்தது. சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குக் குண்டையூர் கிழாரளித்த நெல் மலையை "கோளிலி யெம்பெருமான் குண்டையூர்ச் சில நெல்லுப்பெற்றேன் ஆளிலை யெம்பெருமா னவையட்டித்தரப்பணியே" எனக்கூறித் திருவாரூரிற் கொண்டுபோம்படி பூதகணங்களால் செய்தருளிய தலம். கோளிலிநாதேசர் வண்டமர் பூங்குழலம்மை திருக்குவளைதீர்த்தம்.

திருக்கோளூர்—பாண்டிநாட்டு விஷ்ணுஸ்தலங்களி லொன்று. நிக்ஷேபவித்தன் பாரிசாதவல்லிநாயகி. ஸ்ரீகரவிமானம் குபேரதீர்த்தம் தாமிரபர்ணிநதி கிழக்கே திருமுகமண்டலம் புஜங்கசயனம். நம்மாழ்வார் மங்களாசாசனம்.

திருச்சக்கரப்பள்ளி—இது ஐயம்பேட்டையெனவும் வழங்கும். காவிரித்தென்கரையிலுள்ளது. இந்திரகுமாரனை சயந்தன் பூசித்தது. பசுபதிநாயகர் பால்வளைநாயகி காவிரி தீர்த்தம் திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம்.

திருச்சக்கரமாற்று--திருஞானசம்பந்த சுவாமிகள திருப்பதிகத்தொன்று,

திருச்சங்கரநாராயணர்கோயில்—சங்கரநயினார் கோயிலென்றும் வழங்கும். இது பாண்டிநாட்டுச் சிவஸ்தலங்களி லொன்று. விஷ்ணு சிவசத்தியென்பது புலப்பட, சிவபெருமான் திருமேனியில் வாமபாகத்தை (அர்த்த நாரீச்சுரம்போல)ப் பெற்று விளங்குந்தலம். சங்கரநாராயண சுவாமி. ஆவுடையம்மை. சர்க்கரைக் குளதீர்த்தம். இதற்குப் பதிகமில்லை.

திருச்சதிமுற்றம்— திருநாவுக்கரசு சுவாமிகள் "கோவாய் முடுகியடுதிறற்கூற்றங் குமைப்பதன்முன், பூவாரடிச்சுவ டென்மேற் பொறித்துவை" என்று விண்ணப்பித்து, நல்லூருக்கு வரும்படி ஆஞ்ஞை பெற்றதலம். சிவக்கொழுந்தேசர்.

பெரியநாயகி யம்மை சத்திதீர்த்தம். காவிரித் தென்கரையி லுள்ளது. சத்திமுத்தப் புலவ ரிருந்த நகரமுமிதுவே.

திருச்சாத்தமங்கை—அயவந்தி யென்றும் வழங்கும். காவிரித் தென்கரையிலுள்ளது. திருநீல நக்கநாயனர் திருவவதாரஞ் செய்த தலம். அயவந்தீசர் திருமலர்க் கண்ணம்மை அற்புத சிவகங்கை தீர்த்தம். திருஞான சம்பந்தர் தேவாரம்.

திருச்சாய்க்காடு— காவிரி வடகரையில் ஒரு சிவதலம். உபமந்யுமுனிவர்பூசித்தது. சாயாவனேசர் குயிலினுநன்மொழி யம்மை. சங்கமுக தீர்த்தம்காவிரிநதி. இயற்பகைநாயனர்முத்தியடைந்தது மிவிடமே.

திருச்சானூர்—வடநாட்டு விஷ்ணுஸ்தலங்களி லொன்று. ஸ்ரீவெங்கடேசர் அலர்மேன்மங்கை பத்மசரசு சுவர்ணமுகிரிநதி. திருமகள் பிருகுபுத்திரியா யவதரித்து விஷ்ணுமூர்த்தியை மணம்புரிந்த தலமென்பர்.

திருச்சிக்கல் — காவிரித் தென்கரையில் ஒரு சிவதலம். நவநீதநாதேசர் வேனெடுங்கண்ணியம்மை நவநீத தீர்த்தம் குடைசம்மல்லிகை விருக்ஷம். திருஞானசம்பந்த சுவாமிகள் பதிகம்பெற்றது.

திருச்சிங்கவேள்குன்றம்—வடநாட்டு விஷ்ணு ஸ்தலங்களிலொன்று. நரசிங்கப்பெருமான் இலக்ஷ்மி நாச்சியார் குகைவிமானம் இந்திரதீர்த்த முதலிய தீர்த்தங்கள். நம்மாழ்வார் திருமங்கை மன்னன் இவர்கள்மங்களாசாசனம்.

திருச்சித்திரகூடம்—திருத்தில்லைபெருந்தம் வழங்கும். இதுவே சிதம்பரம். தில்லைகோவிந்தராஜப் பெருமான் புண்டரீக வல்லி நாச்சியார் கனகசபை யருகில் சாத்விக விமானம் புண்டரிகசரசு யோகசயனம் குலசேகராழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

திருச்சிராப்பள்ளி—காவிரித் தென்கரையிலுள்ளது. தனகுப்தன் மனைவி பிரசவிக்கையில், அவள் தாய் காயமருந்து கொண்டுவரச்சென்று அக்கரையி லிருந்து காவிரிப்பெருக்கினால் வரத்தடைபட, சிவபெருமானே அவள் வடிவாக எழுந்தருளி மருத்துவம் பார்த்தனராகலின் இத்தலத்தில் சிவபிரானுக்குத் தாயுமானேசரெனப் பெயர் வழங்கும். அம்மையார் மட்டுவார் குழலி காவிரிதீர்த்தம் செவ்வந்தியென்றும் இத்தலம் பெயருறும்.

திருச்சிவபுரம்—காவிரிதென் கரையிலுள்ளது. பிரமன் பூசித்தது. பிரமபுரிநாயகர் பெரியநாயகி யம்மை பிரம தீர்த்தம். திருஞான சம்பந்தசுவாமிகள் திருநாவுக்கரசு சுவாமிகள் பதிகம்.

திருச்சிறுகுடி—காவிரித் தென்கரையிலுள்ளது. செவ்வாயும் கருடனும் பூசித்தது. மங்களேசர் மங்களநாயகி மங்களதீர்த்தம். திருஞானசம்பந்த சுவாமிகள் பதிகம்.

திருச்சிற்றம்பலக்கோவையார்—திருக்கோவையாரிற் காண்க.

திருச்சிற்றம்பலம்—பொன்னம்பலம் சிதம்பரத்தின் பரியாய நாமங்களிலொன்று. இது சைவத்திருமுறைகள் ஓதத்தொடங்குகையிலும் ஒழிமுடிக்கையிலும் நியதியாக ஓதயுஞ்

திரமாகவுள்ளது.

திருச்சித்தேமம்—காவிரித் தென்கரையி லுள்ளது. அத்திரி முதலிய ருஷிகள்பூசித்தது. விபுதனெனும் அடியவனுக்குப் படியின் கீழ்ப் பொற்காசு வைத்தருளிய தலம். பொன்வைத்த நாதர் அகிலாண்டேசுவரி அகிலாண்ட தீர்த்தம் திருஞானசம்பந்தர் பதிகம்.

திருச்சீரலைவாய்—முருகக் கடவுள் ஆறு படை வீடுகளி லொன்று. இதுவே திருச்செந்திலெனப்படும்.

திருச்சுழியல்—பாண்டிநாட்டிலுள்ள தொரு சிவ தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் தரிசனை யருளியது. திருமேனிநாதேசர் துணை மாலையம்மை கவ்வணை தீர்த்தம் பிரளயதீர்த்தம் சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடல்.

திருச்செங்காட்டங்குடி — காவிரித் தென்கரையி லுள்ளது. விநாயகக் கடவுள் கஜமுகாசுரனை வென்றி கொண்ட விடம். கணபதியின் பூசையைக் கொண்டமையின் இவ்வாலயம் கணபதீச்சரமெனப்படும். சிறுத்தொண்ட நாயனார் முத்தியடைந்த க்ஷேத்திரமு மிதுவே. கணபதீச்சரர் திருக்குழலுமையம்மை கணபதிதீர்த்தம். திருஞான சம்பந்தசுவாமிகள் திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம் பெற்றது.

திருச்செங்குன்றூர்—(1) இது திருக்கொடிமாடச் செங்குன்றூர், திருச்செங்கோடு நாகாசலமுதலிய, பெயர்களோடும் விளங்கும். கொங்கு நாட்டிலுள்ள சிவஸ்தலங்களிலொன்று. உமாதேவியார் சிவபெருமானைப்பிரியாது அர்த்தநாரீச்சரமாக விளங்கும் தலம். குமாரக் கடவுளின் குன்றுதோறாடல்களி லொன்றாகிய விசேடதலம், திருப்புகழ் பெற்றது. முருகக்கடவுள் மெய்ப் பொருளாகவந்து தன் பக்தனுக்காகப் புலைஞெருவனை வென்றது. திருஞான சம்பந்த சுவாமிகள் திருக் கூட்டத்துடன் இருந்தபொழுது நமது திருக்கூட்டத்தினரை வளிர் சுரம் தன்புறத்தக்கண்டு "அவ்விணைக்கிவ் வினை" எனும்பதிகமோதி அந்நோயை யகற்றியவிடம். சுவாமிஅர்த்தநாரீசர் அம்மை பாகம்பிரியாளம்மை பிரமதீர்த்தம் விஷ்ணு தீர்த்தமுதலிய ஷோடஸ தீர்த்தங்கள். (2) மலைநாட்டில் ஒரு விஷ்ணுஸ்தலம். நம்மாழ்வார் மங்களாசாசனம்.

திருச்செங்கோடு—கொங்கு நாட்டில் ஒரு சிவ தலம். திருச் செங்குன்றூரிற் காண்க.

திருச்செந்தில்—முருகக்கடவுள் ஆறு படை வீடுகளிலொன்று. இதுதிருச்சீரலைவாய் திருச்செந்து றென்றும் வழங்கும். இங்கே செந்திற் கோவிந்தரெனும் திருமால் நாச்சிமாருடன் விளங்குகின்றனர்.

திருச்செந்தூர்— திருச் செந்திலிற் காண்க.

திருச்செப்பறை — பாண்டி நாட்டுச் சிவஸ்தலங்களி லொன்று.

திருச்செம்பொன்பள்ளி — காவிரித் தென்கரையிலுள்ள சிவ ஸ்தலம். இந்திரன் குபேரன் முதலியோர் பூசித்தது. சொர்ணபுரேசர் சுகந்தவனநாயகி காவிரிநதி இந்திரதீர்த்தம். திருஞான சம்பந்தர் திருநாவுக்கரசர் பதிகம். இத்தலம் செம்

பொனூர்கோயிலென்றும்வழங்கும்.

திருச்செய்ஞலூர்—காவிரி வடகரையில் ஒரு சிவதலம். சூரசங்காரத்திற்காக எழுந்தருளின குமாரக் கடவுளுக்காக விசுவகர்மனால் நிர்மிக்கப்பட்டது. இங்கே ஒருநாட்டன்றிச் சிவ பிரானை யார்ச்சித்தனரெனக் கந்தபுராணங் கூறும். சண்டேசுரநாயனார் திருவவதாரஞ் செய்தருளப்பெற்ற தலம். சத்தகிரி யீசர் சகிதேவி யம்மை சத்த தீர்த்தம் மண்ணிநதி தீர்த்தம். திருஞானசம்பந்தர் பதிகம்.

திருச்சேரன்மாதேவி } இவ்விரண்டும் பாண்டி
திருச்சேர்ந்தமங்கலம் } நாட்டிலுள்ள சிவஸ்தலங்கள். இவைகட்குப் பதிகமில்லை.

திருச்சேறை—காவிரித் தென்கரையிலுள்ளது. உடையார் கோயிலெனறும் கூறுவர். (1) செந்நெறியப்பேசர் ஞானவல்லி யம்மை மகோகர தீர்த்தம். திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் பதிகம். (2) இதுவே விஷ்ணு ஸ்தலமுமாம். சாரநாதர் சாரநாயகி சாரவிமானம் சாரபுஷ்கரணி. திருமங்கை மன்னன் மங்களாசாசனம்.

திருச்சோற்றுத்துறை—காவிரித் தென்கரையிலுள்ளதொரு சிவதலம். சிவபத்தியிற் சிறந்த அருளாளனெனும் அந்தணன் பசிப் பிணியால் வருந்துகையில், எடுக்குந்தோறுங் குறையாத உலையை அருளித்தருளியவிடம். தொலையாச் செல்வேசர் ஒப்பிலாம்பிகை யம்மை சூரிய தீர்த்தம் காவிரிநதி தீர்த்தம் சமயாசாரியர் மூவர்பதிகமும் பெற்றது.

திருஞானக்கோமுத்தி — திருவாவடுதுறைக்கொருபெயர்.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்—சைவ சமயாசாரியரி லொருவர். ஆளுடைய பிள்ளையார் ஓதாதுணர்ந்தார் முத்தமிழ்விரகர் கவுணியர் தலைவர் முதலிய பல அற்புதத்திருநாமங்களுடையவர்.

சோழவள நாட்டில் சீகாழியில் பிராமணர் குலத்திற் கௌணியர் கோத்திரத்தை யுடைய சிவபாத விருதயர் தவத்திற்றோன்றிய ஆளுடையபிள்ளையார் என்பவர் தமது தந்தை திருக்குளத்திற்குப் போகிறபோது உடன்போய் அவர் நீரில் மூழ்கியபோது பிரிவைக்காற்றாமல் குளக்கரையினின்று அழுகையில் பரமசிவம் பார்ப்பதி சமேதராய்த் தோன்ற உமையாள் தந்த பொற்கிண்ணத் திருமுலைப்பாலையுண்டு திருஞானசம்பந்தர் எனத் திருநாமம் பெற்றனர். இவர் தோணியப்பரைத் "தோடுடைய செவியன்" என்னுந் தேவாரத்தாற் றுதித்துத் தந்தையார் தோளிற் சுமந்து செல்ல, திருக்கோலக் காவிற்குச்சென்று கைக்கொட்டித் தேவாரமோதப் பெருமான் பொற்றாள மருளப்பெற்றனர். திருவரத்துறையில் முத்துப்பந்தரைப் பெற்றனர். திருப்பாச்சிலாச் சிராமத்தில் கொல்லிமழவன் மகளுக்கிருந்த முயலக நோயை நிவர்த்தித்து, திருப்பட்டீச்சரத்தில் முத்துப் பந்தரைப் பெற்று, தந்தையார் செய்யும் யாகத்துக்கு உதவியாகும்படி ஆவடுதுறையில் உலவாக்கிழி பெற்றுத் தந்து அவரைச் சீகாழிக்கு அனுப்பினர். பின்னர், தரிசனத்தனாகத்

ராய் அதிக காலந்தாழ்க்கண்மூடிக் கொண்டிருந்தமையின் பிறவிக் குருடனாகத் தோன்றியவன். இவன் அரிஷ்டன் மகளுள ஹம்ச னெனும் கந்தர்வபதியின் அம்சமெனப் படுவன். இவன் மனைவி காந்தாரி. அவள் தன் பதியைப்போலவே க ண்ணைக்கட்டிக்கொண்டு உலகினைப் பாராதிருந்தவள்; துரியோதன ன் முதலிய நூறு பிள்ளைகளையும், துச்சளை யெனும் பெண்ணையும் பெற்றவள்.

திருதன்—(1) காந்தாரன் பௌத்திரன் (2) கங்காபுத்திரன்.

திருத்தக்கதேவர்—ஐம்பெருங் காப்பியங்களில் முதலாவதாகிய சீவகசிந்தாமணியின் நூலாசிரியர். இவரை ஜைனமுனிவர். திருத்தகு முனிவரென்றுங் கூறப்படுவர். தெலுங்க ரிலிருந்த பொய்யா மொழி யென்பாரால் நன்கு மதிக்கப் பெற்றவரென நச்சினார்க்கினியருரையால் நன்கு விளங்கும். இவர் சிந்தாமணியை 2700 செய்யுள்களா லியற்றினர். பின்னர் கந்தியாரால் அது 3145 செய்யுள்களாகப் பெருக்கப்பட்டது. நரிவிருத்தமென்று கூறப்படும் ஒருசிறுநூலும் இவரா லியற்றப்பட்டது. [கரண்ட.

திருத்தங்கால் — திருத்தண் காலிற்

திருத்தஞ்சைநகர்—காவிரித் தென்கரையில் ஒரு சிவஸ்தலம். தஞ்சாவூர். பிருகதீசுரர் உமா மகேசுவரியம்மை சிவகங்கைத் தீர்த்தம் சிவகங்கை காவிரிநதி. கருவூர்த்தேவர் திருவிசைப்பாப்பாடி அட்டபந்தனஞ்சாத்தியது. செருத்துணை நாயனார் திருவவதாரத்தலம்.



திருத்தஞ்சைமாமணிக்கோயில்—சோழநாட்டு விஷ்ணு ஸ்தலங்களி லொன்று. நீலமேகப் பெருமாள் செங்கமலவல்லி சௌந்தரிய விமானம் கன்னிபுஷ்கரணி அமுத தீர்த்தம் வீற்றிருந்த திருக்கோலம். பூதத்தாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

திருத்தணிகை—தொண்டைநாட்டில் முருகக்கடவுளுக் குரிய விசேடத் தலங்களி லொன்று. செருத்தணி யென்றும் வழங்கும். [செரு=யுத்தம்; தணி=தணிந்தது] முருகக் கடவுள் குறமகளாகிய வள்ளிநாயகியாரைக் கரவிற் கொண்டுபோழ்தெதிர்த்த வேடுவரைப் போரில் வென்று கோபந்தணிந்து தங்கிய இடமென்பது பொருள். பலபுண்ணிய தீர்த்தங்களை யுடையது. இதில் ஒருசுனையில் இந்திரன் பூசிப்பதற்காகக் காலையுச்சி மாலைகளில் ஒவ்வொரு மலர் மலரத்தக்க செங்கழுநீர் உண்டு செய்யப்பட்டிருக்கிறது. செங்கல்வராயர் தெய்வயானையம்மை வள்ளிநாயகி யம்மை குமாரதீர்த்தம். இத்தலத்தினைச் சோலைமலையெனக் கூறுவோரும் இருக்கின்றனர்.

திருத்தண்காலூர் — பாண்டி நாட்டு விஷ்ணு ஸ்தலங்களி லொன்று. சல்லிய பாண்டியனுக்கும் ஸ்ரீவல்லபனுக்கும் புலிக்கும் பிரத்தியக்ஷம். தண்காலப்பன் அன்னநாயகி தேவசந்திர விமானம் பாபநாச தீர்த்தம். திருமங்கை யாழ்வார் மங்களாசாசனம்.

திருத்தண்கால்—வார்த்திகனுக்கொரு பாண்டியனுக் பிரமதாயமாகக்கொ

மேக்கப்பட்ட தோரூர். இது பாண்டி நாட்டில் ஸ்ரீவில்லிபுத்தூருக் கருகி லுள்ளது. திருத்தங்கா லென்றும் வழங்கும்.

**திருத்தண்டலைநீணெறி** — காவிரித் தென்கரையில் ஒரு சிவஸ்தலம். திருமாலின் கூர்மாவதாரத்தைப் பங்கஞ்செய்து அதன் ஓட்டினை யணிந்தவிடம். இத்தலத்திற்கு ஒரு மைலில் ஆரத்தி யுள்ள கணமங்கலத்தில் அவதரித்த அரிவாட்டாய நாயனார் முத்தியடைந்தது. இத்தலத்தில் மாவடு நிவேதனம் விசேடம், நீணெறிநாதேசர் ஞானநாயகி யம்மை சிவகங்கை தீர்த்தம். திருஞான சம்பந்தர் தேவாரம்.

**திருத்தருமபுரம்** — காவிரித் தென்கரையில் ஒரு சிவஸ்தலம். திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் தாயார் ஜனனபூமியாகலின், அவர் சுற்றத்தினர் திருஞான சம்பந்த சுவாமிகள் தேவாரப் பதிகம் நாடெங்கும் விளங்குதற்குக்காரணம் திரு நீலகண்ட யாழ்ப்பாணர் யாழிலமைத்துப் பாடுதலேயாமெனக் கேட்ட பாணர் மனம் பொறாது பிள்ளையாரைப் பணிந்து யாழில் அமையாத ஒரு பதிகம் கட்டளையிட்டருளும்படி வேண்டி "மாதர் மடப்பிடியும்" எனும் பதிகமோத, அதனை யாழிலமைக்க முயன்றும் இயலாமல் யாழினை சிலத்தில்மோதச்செல்வுழி, பிள்ளையார் தடுத்து இயன்ற அளவு வாசிக்கக் கட்டளையிட்டருளியதலம். யாழ்மூரிநாதேசர் சதா மதுராம்பிகை யம்மை கதலி தீர்த்தம் தருமதீர்த்தம் கதலிவன க்ஷேத்திரம்.

**திருத்தலைச்சங்காடு**—காவிரித் தென்கரையி லுள்ள சிவக்ஷேத்திரம். விஷ்ணுவுக்குச் சங்கமருளியதலம் சங்கநாயகேசுரர் சௌந்தரியம்மை திருக்குள தீர்த்தம் வில்வவிருக்ஷம். திருஞான சம்பந்தர் பதிகம் பெற்றது.

**திருத்தலையாலங்காடு** — காவிரித் தென்கரையி லுள்ளதொரு சிவஸ்தலம். தாருகாவன விருடிய ரனுப்பிய முயலகன் முதுகின்மேல் சிவமான் நடித்தருளிய விடம். ஆடவல்லவீசுரர் திருமடந்தை யம்மை சொர்ண தீர்த்தம். திருநாவுக்கரசு சுவாமிகள் பதிகம்.

**திருத்தலையூர்**—காவிரித் தென்கரையில் ஒரு சிவஸ்தலம். அறுபான்மூமமை நாயன்மாரி லொருவராகிய உருத்திர பசுபதி நாயனார் முத்திபெற்றது.

**திருத்தாமனார்**—புறநானூறு பாடிய புலவர்களி லொருவர். இவராற் பாடப்பட்டவன் சேரமான் வஞ்சன்.

**திருத்தானமுடையார் கோயில்**—திருக்கோலக் காவிற்கொருநாமம்.

**திருத்திலதைப்பதி**—காவிரித் தென்கரையில் ஒரு சிவஸ்தலம். மதிமுத்த மென்றும் பெயர். மதிமுத்தநாதேசர் பொற்கொடி யம்மை சோமதீர்த்தம். திருஞானசம்பந்தர் பதிகம்.

**திருத்தினைநகர்**—நடுநாட்டுச் சிவஸ்தலங்களி லொன்று. திருக்கீசுரர். ஒப்பிலாநாயகியம்மை கெடிலநதி மணிமுத்தாநதி தீர்த்தம். கொன்றை விருக்ஷம். தினையமுதநிவேதனம். சுந்தரமூர்த்திசுவாமிபதிகம்.

**திருத்துருத்தி**—காவிரித் தென்கரையிலுள்ள சிவஸ்தலங்களிலொன்று. சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குற்ற கொடிய வியாதிநீங்கியவிடம். வேதேச்சுரர் அமுதமுகிழாம்பிகையம்மை காவிரிநதி தீர்த்தம் குற்றால விருக்ஷம். சமயாசாரியர்மூவர் பதிகமும் ஐயடிகள் காடவர்கோன் க்ஷேத்திர வெண்பாவும் ஓதப்பெற்றது.

**திருத்துறையூர்** — மகதநாட்டுச் சிவஸ்தலங்களிலொன்று. நாரதமுனிவர் பூசித்தது. சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் திருவடி தீக்ஷை செய்தது. சந்தான குரவரிலொருவரான அருணந்தி சிவாசாரிய சுவாமிகளை ஆதிசைவமரபிலே சகலாகம பண்டித ரென்னு காரணப் பெயருடன் அவதரித்தது, சிவஞான சித்தியார் இருபாவிருபஃது என்னும் சித்தாந்த சாத்திரங்களை யருளி முத்தி பெற்றது. துறையூரப்பசுரர் பசுபதீச்சுரர் பூங்கோதையம்மை சிவலோகநாயகி பெண்ணைநதிதீர்த்தம். சுந்தரமூர்த்தி சுவாமிகள் பதிகம்.

**திருத்தூங்கானைமாடம்** — மகதநாட்டுச் சிவஸ்தலங்களி லொன்று. சுடர்க்கொழுந்தீசர் கடந்தை நாயகி கெடில நதிதீர்த்தம் கஜவிமானம். அறுபான் மும்மை நாயன்மாரி லொருவராகிய கலிக்கம்ப நாயனார் முத்திஸ்தலம். திருநாவுக்கரசுசுவாமிகளுக்குச் சூலமுத்திரையும் இடபமுத்திரையும் அநுக்கிரகித்த தலம். திருஞான சம்பந்த சுவாமிகள் திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் பெற்றது.

**திருத்தென்கூர்**—காவிரித் தென்கரையிலுள்ளது. ஹரி ஹர புத்திரர் பூசித்தது. வெள்ளிமலைநாதர் பெரியநாயகியம்மை கருணாகர தீர்த்தம். திருஞான சம்பந்தசுவாமிகள் பதிகம் பெற்றது.

**திருத்தெளிச்சேரி**—காவிரித் தென்கரையில் ஒரு சிவஸ்தலம். பார்வதீசுரர் அருட்சோதியம்மை. பார்வதி தீர்த்தம் வன்னிவிருக்ஷம். திருஞான சம்பந்தப் பிள்ளையார் இத்தலத்தினின்றும் போதிமங்கலத்திற் செழுந் தருளுகையில், திருச்சின்ன வோசை கேட்டப் பொறாத புத்தர்கள் திருச்சின்னத்தைத் தடுப்ப, சம்பந்த சரணாலயர் அவ்விரவாக்கினால் அவர்கள் தலைவனான புத்தநந்தி தலையில் இடிவிழுந்த விடம். பின்னர் சாரிபுத்தன் பிள்ளையாருடன் வாதிட்டுத் தோற்று அவனும் பிற புத்தர்களும் சைவரான விடம். திருஞான சம்பந்த சுவாமிகள் பதிகம்.

**திருத்தெற்றியம்பலம்** — ஒரு விஷ்ணுஸ்தலம் காவிரிவடகரையிலுள்ளது. செங்கண்மால் செங்கமலவல்லி திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

**திருத்தென்குடித்திட்டை**—காவிரித் தென் கரையிலுள்ள சிவதலம். பசுபதீசர் உலக நாயகியம்மை சக்கர தீர்த்தம் பசு தீர்த்தம். திருஞான சம்பந்தர் பதிகம்.

**திருத்தென்முல்லைவாயில்**—காவிரிவடகரையிலுள்ள சிவஸ்தலங்களி லொன்று. இந்திரன் சந்திரன் முதலியோர் பூசித்தது. முல்லைவன நாதேசர் அணிகொண்ட கோதை

வஸ்தலம். காவிரி வடகரையி லுள்ளது. நவக்காதன் செங்கமலவல்லி திருமங்கை மன்னன் மங்களாசாசனம்.

திருநல்லம் — காவிரித் தென்கரையிலுள்ள ஒரு சிவஸ்தலம். உமாமகேசுரர் மங்களநாயகி சத்தி தீர்த்தம். திருஞான சம்பந்தர் திருநாவுக்கரசர் பதிகம் பெற்றது.

திருநல்லூர்—காவிரித் தென்கரையில் ஒரு சிவஸ்தலம். பாண்டவர் கண்ணன் வசுதேவன் முதலியோர் பூசித்தது. பெரியாண்டேச்சுரர் திரிபுர சுந்தரியம்மை சுந்தர தீர்த்தம் திருநாவுக்கரசு சுவாமிகளுக்குத் திருவடி முடிசூட்டப் பெற்ற தலம். அமர்நீதி நாயனார் முத்தியடைந்த விடம். திருஞான சம்பந்தர் திருநாவுக்கரசர் பதிகம்.

திருநல்லூர்ப் பெருமணம் — காவிரி வடகரையி லுள்ள சிவஸ்தலம். சிவலோகத் தியாகேசர் நங்கையுமை நாயகியம்மை கொள்ளிடநதி தீர்த்தம. திருஞான சம்பந்தப் பிள்ளையார் திருமண முடித்து அக்கினி வலம்வர வேண்டுகையில் அக்கினியானவர் சிவ பெருமானே யென்று ஆலயத்திற் கெழுந்தருள ஆலயம் சோதிருபமாக விளங்கி அதனுள் ஒருவாயில் காட்டக்கண்டு "நமச்சிவாயப் பதிகம்" திருவாய் மலர்ந்தருளித் திருமணத்திற்கு வந்திருந்த எல்லாப் பரிசனங்களுடனும் பிள்ளையார் தம் மனைவியார் திருக் கரத்தைப் பற்றிக்கொண்டு திருநீலகண்ட நாயனார் முருகநாயனார் சிவபாதவிருதயர் நம்பியாண்டார் நம்பி. திருநீலகண்டயாழ்ப்பாண நாயனார் முதலியோரும் பிறரும் தம்பதிகளுடன் வாச் சோதியிற் கலந்தருளிய தலம். இது ஆச்சாபுரமென்றும்வழங்கும்.

திருநவலிங்கபுரம்—பாண்டி நாட்டுச் சிவஸ்தலங்களி லொன்று.

திருநள்ளாறு—காவிரித் தென் கரையில் ஒரு சிவஸ்தலம்.தெர்ப்பாரணியேசுரர் போகமார்த்த பூண் முலையம்மை நளதீர்த்தம். மூவர்பதிகமும் பெற்றது, திருஞான சம்பந்தப்பிள்ளையார் மதுரையில் சுவிநு சாத்தி "போகமார்த்த பூணமுலையாள்" எனும் இத்தலத் திருப்பதிகத்தைப் பெற்றுத்தீயிலிட்டு வேகாது காட்டி வென்றி கொண்டனராகலின அது பச்சைத் திருப்பதிகமெனறிககாலத்தும வழங்கும்,

திருநறையூர்ச்சித் தீச்சுரம் — இது நறையூரெனவும் வழங்கும், காவிரித்தென்கரையி லுள்ளது. சௌந்தரேசர் அழகம்பிகை தேன்சிந்தி தீர்த்தம், திருஞான சம்பந்த சுவாமிகள சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்,

திருநனிபள்ளி—காவிரித் தென்கரையில் ஒரு சிவதலம். நற்றுணையப்பேசர் பர்வதராஜ புத்திரி காவிரிநதிதீர்த்தம். திருஞான சம்பந்த சுவாமிகள் தாயார் ஜனனக்ஷேத்திரம். மூவர்பதிகமும் பெற்றது.

திருநன்னிலத்துப் பெருங்கோயில்—காவிரித் தென்கரையி லுள்ளது. பிரகாசேசர் பிரகாசேசுவரி சூரியகாந்த தீர்த்தம். கோச்செங்கட்சோழநாயனார் திருப்பணி செய்ததலம். சுந்தரமூர்த்திசுவாமிகள் பதிகம்.

திருநாகேச்சரம்—காவிரித் தென்க

கரையில் ஒரு சிவஸ்தலம். செண்பகாரணியேசர் குன்றமுலை நாயகி நாகதீர்த்தம் இந்திரதீர்த்தம். மூவர்பதிகமும் பெற்றது. சேக்கிழார் சுவாமிகள் வழிபட்டதலம்.

திருநாகைக்காரோணம — காவிரித் தென்கரையில் ஒரு சிவ ஸ்தலம். காயாரோகணேசர் நீலாயதாக்ஷியம்மை. மூவர் பதிகமும்பெற்றது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் "கத்தூரிகமழ்சாந்தம் வெண்பட்டும்வேண்டில் கடனாகைக் காரோண மேவியிருந்தீரே" எனக் கூறியது மிதலமே.

திருநாட்டியத்தான்குடி—காவிரித்தென்கரையி லுள்ளது. கரிநாதேசர் மலர் மங்கையம்மை மகாதீர்த்தம. கோட்புலி நாயனார் திருவவதாரஞ்செய்தருளிச் சேனைக் காவலராய், அரசனது வினைமேற்கொண்டு செல்பவர், சிவாலய நைவேதனத்திற்காக வைத்துப்போன நெற்கோட்டைகளை, அவர்வரத் தாழ்த்தமையால், அப்போது நேரிட்ட கருப்புக்காலத்து சுற்றத்தார், பின்னர்க் கொடுத்து விடலாமென்று கருதி எடுத்துப் புசிக்கப் போர்வினைமுடிந்துவந்த நாயனார், நைவேத்தியத்திற்கு வைத்த நெல்லைக்காணாது, அதனை யருந்திய சுற்றத்தாரை வாட்கிரை யாக்கியதன்றியும், ஓர் பசுங்குழவியையும், வாளாலேற்கத் தொடங்குகையில் அயனின்முன் விலக்க, அக்குழவி அவ்வமுதுபடி யுண்டியாலுண்ட பாலைப்பருகினமை பற்றி அதனையுந் துணித்தல் வேண்டுமென்று துணித்தருள, அந்நாயனாரை ஆட்கொள்ளக் கோட்டை களிற் சுற்றத்தாரோடு சிவலோகத்தை யடைவித்த தலம். இந்நாயனார் தமது பெண்களிருவரைச் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குக் காட்டி மணஞ் செய்யவேண்டிய பொழுது, அவர் அவர்களை மகண்மைகொண்டு சிங்கடியப்பன், வனப்பகையப்பன், எனத் தங்கு நாமஞ்சூட்டிப் பதிகம் பாடி யருளியதலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளாற்பதிகம் பெற்றுள்ளது.

திருநாராயணபுரம்—துளுவநாட்டில் ஒருவிஷ்ணு ஸ்தலம். இது மேலைக்கோட்டை யென்றும் வழங்கும். செல்லப்பிள்ளை யாதவநாராயணமூர்த்தி. எது கிரிநாயகர் வரலக்ஷ்மி. ஆனந்தவிமானம் வைகுண்டகங்கை முதலிய எட்டுத் தீர்த்தங்கள். பிரகலாதன் பூசித்துப் பிறவித்துயர்போக்கிய ஸ்தலமென்பர்.

திருநாரையூர் — காவிரி வடகரையி லுள்ள சிவ ஸ்தலம். சவுந்தரேசர் திரிபுரசுந்தரியம்மை காருண்ணிய தீர்த்தம் புன்னைவிருக்ஷம். தேவதத்தனெனும் கந்தர்வன் யாதநிவேதிகனிபறிக்கையில் அம்மரத்தடியே நிஷ்டையிலிருந்த துர்வாசமுனிவர் முன் ஒரு கனிவீழ்ந்து அவரது நிஷ்டைக் கிடையூறுசெய்தமைபற்றி நாரையாக வென்று சபிக்க, நாரையாகிய அக்கந்தருவன் பூசித்து முத்திபெற்ற காரணத்தால் இப்பெயரேற்றது. நம்பியாண்டார் நம்பியவதரித்தப் பெரியர் திருவவதார க்ஷேத்திரம். பொல்லாப்பிள்ளையார் எழுந்தருளியிருப்பார்.

திருநாலூர்மயானம்—காவிரித் தென்

கரையில் சிவதலம். ஆபஸ்தம்பருஷி பூசித்தது. நாளூர்வேறு - மயானம் வேறு. இவ்விரண்டும் திருஞானசம்பந்தர் பதிகம். பலாசவனேசர் பெரியநாயகி யம்மை பலாவருத்தீர்த்தம்

திருநாவலூர்—நடுநாட்டில் சிவஸ்தலங்களி லொன்று. திருநாவலேசர் சுந்தரநாயகியம்மை சிவகங்கை தீர்த்தம் நாவல்விருக்ஷம். சுந்தரமூர்த்திசுவாமிகளும் சடையனார் நரசிங்கமுனையரையர் இவர்களும் அவதரித்தஸ்தலம். சடையனார் இசைஞானியார் நரசிங்கமுனையரையர் முத்திபெற்ற தலமுமிதுவே. சுந்தரமூர்த்திசுவாமிகள் பதிகம் பெற்றது.

திருநாவாய்—பாண்டிநாட்டு விஷ்ணுஸ்தலங்களி லொன்று கஜேந்திரனுக்குப் பிரத்தியக்ஷமாம். பிரசன்னநாராயணன். மணிமங்கை நாச்சியார். வேதவிமானம் செங்கமலசரசு தெற்கே திருமுக மண்டலம் வீற்றிருந்த திருக்கோலம். பொய்கையாழ்வார் நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

திருநாவுக்கரசு சுவாமிகள் - திருமுனைப்பாடிநாட்டிலே திருவாமூரில் வேளாள மரபில் புகழனாருக்குத் திலகவதியாரும், மருணீக்கியாரும் பிறந்தார்கள். மருணீக்கியார் சமணர் போதனையாற் சைவ சமயத்தைத் துறந்து சமணராய்த் தருமசேன ரென்று பேர்பெற்றிருக்கையில், தமக்கை திலகவதியார் திருவதிகையில் சிவசேவைத் தொண்டு செய்துகொண்டு தம்பியாரான மருணீக்கியாரின் விதியைக் குறித்துச் சிவபெருமானிடம் விண்ணப்பித்துக் கொண்டுவர். இவர் விண்ணப்பத்திற்கு இரங்கிய சிவபெருமான் அவருக்குச்சூலைநோயை ஏவ அது திடீரென உண்டாயிற்று. அதனைப் பொறாத அவர் திலகவதியாருக்குத் தெரிவிக்க, அவர்விபூதி தரித்துப் பஞ்சாக்ஷரத்தை யுபதேசித்துத் திருவதிகையில் சிவ சந்நிதானத்திற் கொண்டு போய்விட, அவர் பரம சிவத்தைத் தியானித்துக் 'கூற்றாயினவாறு விலக்ககிலீர்' என்னுந் தேவாரமோதிச் சூலைநோய்நீங்கப்பெற்றனர். அருமைத் திருப்பாசுரங்களைப் பாடப்பெறும்திருவாக் குடைமையின் இவருக்குத் திருநாவுக்கரச ரெனத் திருநாமமுண்டாயிற்று. இவர் சமணசமயத்தி விருந்து சைவராயினமையின் இவரிடம் விரோதித்த சமணர்கள் தமதரையனுக் குரைத்த, அவன் தனது மந்திரியை விட்டு நாயனாரை அழைப்பித்து வருத்தவேண்டுமெனத் துணிந்து, அழைப்பிக்கவும் அரசனை மதியாது வெறுத்ததேவந்திப் பின்னும் சேவகருடையால் ஆவன ஆருகவென்று துணிந்து சென்று அச் சமணரால் நீற்றறையில் வைத்தபோதும்விடமுண்பித்தபோதும் யானைக்காலில் இடறவிட்டபோதும் கற்றூணிற் பிணித்துக் கடலி விட்டபோதும் சிவநாமோச்சாரணையால் ஊறுநீங்கி, உலகமேத்த நின்றனர். பின்னர் சிவபெருமானால் திருத்தூங்கானைமாடத்தில் இடபக்குறியும் சூலக்குறியும் பெற்றும், திங்களூரில் திருவடி தீக்ஷைபெற்றும், அப்பூதி நாயனாரின் மகவுவிஷமகலவிடத்

தினின்றும் மீட்பித்தும், திருவீழிமிழலையில் பொற்காசினைப் பெற்று அடியவர்கட்கு அமுது அருத்தியும், திருமறைக்காட்டில் கதவைத் திறப்பித்தும், திருவையாற்றில் கைலாச தரிசனங் கண்டும், பன்னுள் பரமசிவத்தின் அருட்பெருக்கை உலகறிவித்து ஆலயங்களுக்குத் தேவாரமோதித் திருப்புகலூரில் உழவாரத்தொண்டு செய்யா நிற்கையில், தம்மை மாயப் பெருங்கடலில் வீழ்த்தவந்த வானவர் மங்கையரை மதியாதும் அவர் மயலில் புகாதும் உழவாரத் தொண்டு செய்யும்போது சோதனையாக எதிர் தோன்றிய பொன்னையும் மணியையும், பருக்கைக் கற்களைப்போல் பொருட்படுத்தாது அப்புறமெறிந்தும் 'எண்ணுகேனென சொல்லி எண்ணுகேனே' என்னுந் தேவாரமோதிச் சிவபெருமான் திருவடி நீழலைப் பெற்றனர். இவர் சைவகுரவர்களுள் ஒருவராயுள்ளவர் இவர் சரிதையை,

"போற்றுதிரு வாமூரில் வேளாண் டொன்மைப் பொறுவில்கொறுக்கையரதிபர் புகழனார்பால், மாற்றருமன் பிணிதவிர்த்த வதியாமாது வந்துதித்த பின்புமருணீக்கியாருந், தோற்றியமண் சமயமுறு துயர நீங்கத் துணைவருடர் வந்த சூலை நோயாற், பாற்றருநீ றிடவெய்திப் பாடலிபுத் திரத்திற் பாழியொழித் தரனதிகைப் பதியில் வந்தார்.

"வந்தமக் கையாருணா வீறு சாத்தி வண்டமிழா லேய்நீக்கு வாக்கின் மன்னுய், வெந்தபொடி விடம்வேழம் வேலைநீந்தி வியன் குலங்கொடியிடம் விளங்கச் சாத்தி, வந்தமிலப் பூதிமக னரவ மாற்றி யருட்கா பெற்றுமறை யடைப்பு நீக்கிப், புந்திமகிழ்ந்தையாற்றிற் கயிலை கண்டு பூம்புகலூ ரரன்பாதம் பொருந்தினாரே."— எனவருந் திருத்தொண்டர்புராணசாரத் திருவிருத்தங்களானறிக.

திருநாளைப்போவார்—அறுபான் மும்மைநாயன்மாரி லொருவர். சோழநாட்டில் ஆதனூரிற் புலைக்குலத்திற் றோன்றிச் சிவநேசத்துடன் சிவாலயங்களுக்குப் பேரிகை முதலியவாசியங்களுக்குவாரும், சுவாமிக்குக் கோரோசனையுங் கொடுத்தலே திருத்தொண்டாக வுடைய நந்தனார் என்பவ ரொருவ ரிருந்தனர். அவர் மேற்கூறிய திருப்பணிகளை இயற்றிவரும்போது திருப்புன்கூருக்கு எழுந்தருளிச் சிவக்கொழுந்தைத் தரிசிக்கச் சந்நிதியிலிருக்கும் நந்திதேவருடைய உன்னத வடிவால் முடியாமையால் வருந்தி நின்றனர் ஈதறிந்த சிவபெருமான் நந்தியை விலகச்செய்து நாயனருக்குத் தரிசனந் தந்தருளினர். நாயனர் மகிழ்ந்து பின்னர் சிதம்பரத்திற்குப்போய் நடராச மூர்த்தியைத் தரிசிக்க வெண்ணி இது நமது புலைத்தன்மைக்கு இயலாத காரியமென வருந்திப் பின்னும் ஆசைமேலீட்டால், நாளைப் போவேன் நாளைப்போவேன் என்பார், இதனாலேயே இவருக்குத் திருநாளைப் போவார் எனத் திருநாம முண்டாயிற்று. பின்னர் ஓர் தினஞ் சிதம்பரஞ்சென்று மதிலைவலஞ்செய்துள்ளேபோய்ச் சுவாமியைத் தரிசிக்க இயலாமல் வருந்தினர். அன்றிரவு